அருள்மிகு கொப்புடைய நாயகி அம்மன்

# அந்தாதி





ஆ. குறள் பித்தன்

அருள்மிகு கொப்புடைய நாயகி அம்மன்

# அந்தாதி



கவிஞர்: ஆ. குறள்பித்தன்

புவனேஸ்வரி பதிப்பகம்

மானகிரி-623 307

ப. பொ. மு. மாவட்டம்

## வாழ்த்துரை

### தவத்திரு குன்றக்குடி அடிகளார்
அவர்கள்

இனிய அன்பர் கவிஞர் குறள்பித்தன் அவர்கள் எழுதிய காரைக்குடி கொப்புடையநாயகி அந்தாதியைப் படிக்கும் இனிய வாய்ப்புக் கிடைத்தது. செந்தமிழில் பத்திச்சுவை ததும்பக் கவிதைகள் அமைந்துள்ளன. கவிதையின் நடை அற்புதம்! கவிதைகளில் பல அப்பரடிகள், தாயுமானார் அடிச்சுவட்டில் தன்னிலை ஆய்வு அமைவில் அமைந்துள்ளன. இத்தகு கவிதைகள் ஊனையும். உயிரையும் உருக்குந்தன்மையனவாக அமைந்துள்ளன. இறைவனை வாழ்த்தப் பழுத்தமனம் தேவை. "பழுத்த மனத்து அடியார்,' என்று திருமுறை பேசும், கவிஞர் குறள்பித்தன் அவர்கள் பழுத்த மனமுடைய அறிஞரே கொப்புடையநாயகியைப் பரவுவதாகக் கூறுகிறார். அடுத்துத் தன்னிலை ஆய்வில் அமைந்துள்ள பாடல்.

"அடைந்த எனைத்தாங்கி அன்பூட்டி ஆன்றோர்பால்
எந்தநாளும்
தொடர்ந்துமே தொண்டாற்றத் தூண்டுவாய்
என்னையே தூயவளே'
நடந்தது போகட்டும் நாட்டில்தான் நாயகி நாரணியே!
திடந்தந்து காப்பாய்நீ! தேவியே! தென்னன் விருப்பினளே!
(24)

இறைவியிடம் தன்னை அன்பூட்டித் தாங்கும்படி வேண்டுவது உள்ளுணர்விலிருந்து எழுந்ததாகும். அன்னை

கொப்புடைநாயகியை ஆன்றோர்பால் கூட்டிவைக்கும்படியாக வேண்டுவது சிவநெறியின் திரண்ட கருத்தாக அமைந்திருப்பது சிந்தனைக்குரியது. 'தொண்டலால் உயிர்க்கு ஊதியமில்லை' என்ற திருமுறைநெறிக்கு ஏற்பத் 'தொண்டாற்றத் தூண்டி வளர்க்கும்படி வேண்டுகிறார்.' 'நடந்தது போகட்டும்' -இது கவிஞரின் சொந்த அனுபவம். ஆயினும் பலருடைய் அனுபவமும் அதுவேயாம்! 'நடந்தது போகட்டும்' என்ற முடிவெடுத்தல் வாழ்க்கையின் கொடுமையாகும். கவிஞர் திடம் வேண்டுகிறார். ஆம்! தொண்டு செய்யத் திடம் வேண்டுகிறார்.

கவிஞரின் கவிதைகள் அருமையில் எளிய தமிழில் அமைந்துள்ளன. கவிஞர் பாராட்டுதலுக்குரியவர். கவிஞர் தமது வாழ்க்கையில், கொப்புடையநாயகியின் திருவருளால் இன்புறு நலன்கள் பலவும் பெற்று இனிதே வளர்க! வாழ்க!

குன்றக்குடி
24-4-88

அடிகளார்

## வாழ்த்துரை

### டாக்டர் இராதா தியாகராசன்

அவர்கள்

துணை வேந்தர் அழகப்பா பல்கலைக் கழகம்

காரைக்குடி

திரு. குறட்பித்தன் காரைக்குடியிற் கோயில்கொண்டு வீற்றிருக்கும் கொப்புடையநாயகி அம்மையின் திருவடிக்கு சாற்றிய அந்தாதிப் பிரபந்தத்தைப் படித்து இன்புற்றேன். இன்றமிழிலக்கிய வரிசையில் புலவர் பெருமக்கள் நன்றெனப் போற்றும் தகுதிநலம் நனிசிறக்கப்பெற்ற இப்பிரபந்தம், தமிழன்னையின் அமிழ்தனைய திருமேனியை அணிசெயத் தக்கதோர் மணியாரமும் ஆகும்.

அட்ட வீரட்டத் தலங்களுள் ஒன்றாகிய திருக்கடவூரில் அருளாட்சி புரியும் அன்னை அபிராமியின் திருவடிகட்கு அருளாளராம் அபிராமி பட்டர் சூட்டிய அபிராமி யந்தாதியின் அழகுத் தமிழ்நடையை, இப்புதுத் தமிழ் இலக்கியத்தின் நடை, பல இடங்களில் ஒத்துவிளங்குவது குறிப்பிடத்தக்கதாகும். சான்றாக ஒருபாடல் காண்போம்.

> "நிலவே! நிலவின் ஒளியே! உனையே துதிப்பவர்தம்
> தலையே! விழியே! உணர்வே! திருவேகா ரைக்குடியின்
> நலமே வியதிருத் தாயே புலித்தோல் தரித்தவரின்
> பலமோங் கிடப்பா தியைப் பெற்ற பாவையே
> பொன்மலரே!"

கொப்புடைய அம்மையைக் குளிர்பூந்தமிழால் விளித்து இக்கவிஞர் அமைக்கும் நடைநயம் சான்ற தொடர்கள் பற்பலவும் அபிராமியந்தாதியை நினைவு கூறச்செய்தல்.

அவ்வருட் பாடலில் இக்கவிஞருக்குள்ள அன்பினையும் தோய்வினையும் காட்டும்.

1 வித்தகி அன்புமழைபொழி ஞான விழிமலர்ந்த
புத்தகி பூமகள் பாவாணர் போற்றும் பைந்தமிழே"

2 அழகே அமுதே அகவெளியே

3 உத்தமி ஓங்கார நாயகி ஒன்பது கோள்வணங்கும்
முத்தமிழ்ச் செல்வி மூகாம்பிகைப் பேரும்
உடையவளே

4 காப்பவள் என்றும் கருணை மழைபொழி
கற்பகத்தாள்
பூப்பவள் புன்னகை, பார்ப்பவள் பாசமாய்

என்பன முதலிய தொடர்கள் இதற்குச் சான்றாவன வாகும்.

இக்கவிஞரின் தமிழ்ப் பற்றும், நற்றமிழ் இலக்கியத்தின் பால் இவர்கொண்ட காதலும் இவ்விலக்கியப் படைப்பில் புதுமையான முறையில் வெளியிடப் பெற்றுள்ளன. உருவகங்கள் கவிஞர்களின் படைப்பாற்றலைக் காட்டும் என்பர். முற்றும் புதிய உருவகங்களைப் படைப்பதில் வல்லவராக விளங்கும் இக்கவிஞர், தமிழ் மொழியையும் இலக்கியங்களின் பெயர்களையும் தமிழ்ச் சொல்லின் அருமையையும் வைத்தே அம்பிகைக்கு உருவகங்கள் அமைப்பது போற்றத்தக்கது.

'செந்தமிழ்ச் சொல்லமுதே'. என அம்மையை விளிக்கும் கவிஞர் 'தீந்தமிழே' என்றும், 'தமிழே, உயிரே, தனிச்சுவைச் சொல்லே, திருக்குறளே, அமிழ்தே, அறிவே, அறவோர்கள் தந்திட்ட பல்கலையே'' என்றும் அழைத்துத்

தமிழின் இலக்கிய வளத்தையும் இன்சுவைச் சொல்லழகையும் அம்மையின் அருள் வளத்துடன் ஒப்பவைத்துக் காண்கின்றார், தமிழ் இலக்கியத்தின் ஆழத்தையும், சிந்திக்கத் தெவிட்டாது செவிகுளிரச் சொல்விருந்து அளிக்கும் அருமையையும்,

''தமிழ்ச் செல்வமே சிந்தனைத் தேன்குடமே'' என்றும், 'வண் தமிழ்ப் பெட்டகமே' என்றும் 'வளர் தமிழின் நனிமிகு பாலாறே' என்றும் அழைக்கும் விளித் தொடர்களால் புலப்படுத்துகின்றார்.

கவிஞர் இவ்வாறு தமிழ் இலக்கியத்தைப் பொதுவாக குறிப்பிடுவதுடன் திருக்குறள், மணிமேகலை, கலித்தொகை திருமுறைகள் ஆகியவற்றில் மிகுதியான பற்றுக்கொண்டு சிறப்புறக் குறிப்பிடும் கவிதை அடிகள் மிக்க அழகுடன் பொலிகின்றன. இக்கவிஞர், உருவகங்களைச் சமைக்கும் திறனும் அவ்வடிகளில் பொலிந்து விளங்குகின்றது.

''தேன்மணப் பூவே, தினமணித் தெய்வமே, தீந்தமிழே கூன்மனம் மாற்றிக் குறைதீர்க்கும் வள்ளுவ ஓவியமே'!

''அளிப்பாய் அடியார் விரும்பும் வரமே அளித்துடனே
களிப்பாய் அதுகண்டு கற்றவர் போற்றும்
கலித்தொகையே''

என்றும் ''மணிமேகலையே, மனோன்மணியே'' என்றும் தமிழ் நூல்களாகவே அம்மைக்கு உருவகம் அமைப்பது புதுமையும் இக்கவிஞரின் சிறப்பியல்பும் ஆகும்.

பன்னிரு திருமுறைகள் அம்பிகையின் பொற்புகழையும் சாற்றுவன என்பதைச் சிலேடை நயம் தோன்ற, ''திருமுறைக் கொப்புடைத்தாய் உன் பொற்பாதம் அடைந்தனனே'' என்று இக்கவிஞர் கூறுவது நயம்பட

அமைந்துள்ளது.

பாடல் முழுவதும் பராசக்தியின் பாத மலர்கட்கு இக்கவிஞர் கொண்டுள்ள பக்திநலத்தை வெளிப்படுத்தும் உருவகங்களாகவே அமையும் இடங்களை இப்பிரபந்தத்தில் நிறையக் காணலாம். ஒரு சான்று காண்போம்-

> "கனியின் சுளையே கரும்பின் சுவையே கனதனமே
> நனிபசும் பாலே நகைமுக மாதே மணிச்சரமே
> பனிமலர்த் தேனே பரமனின் மானே பசுங்கிளியே
> இனியொரு பொல்லா இடர் எனைத் தீண்டாமல்
> ஏற்றருளே"

அம்பிகையை மயிலாக உருவகித்து, "தில்லைக்
கூத்தன் மயிலே"

என விளிக்கும் கவிஞர், இதையடுத்து, பிரிமொழிச் சிலேடையாக "அவர் மகனார் இடமயிலே" என ஒரு தொடரை அமைத்து, முருகன் திருக்கைகளில் வேலாக விளங்குவது ஞானசக்தியே என்பதைக் குறிக்கும் இடம் நயமாக அமைந்துள்ளது.

வேர்ப்பலாவின் சுவையைக் குமர குருபரரும் பாரதிதாசனும் அழகுறப் பாடுவர். கவிஞர் குறட்பித்தனும் அம்பிகையை ஏத்தி இலக்கியம் படைக்க விரும்பும் தமது ஆர்வத்தினை. "வேரில் பழுத்த பலாத் தமிழால் உனை வாழ்த்துவனே" என்று குறிப்பிடுகின்றார். இவரது சொல்லாட்சி புதுமையும் பொருள் நலமும் உடையதாய் விளங்குகின்றது. தமது துன்பம் தீர்க்குமாறு அம்மையை வேண்டுபவர்.

"இடர் போக்குவாய் என் அன்பகமே" என்றும், 'நைந்தோர் தமக்கு நீ நற்றுதியே" என்றும் பிரமனின்

நாவில் வீற்றிருக்கும் கலைமகளை, 'நாவுக்கரசி' என்றும் கூறுவன புதுமை திகழும் சொல்லாட்சிக்குச் சான்றுகள் ஆகும்.

ஓசை நயமும் சொல்லழகும் பொது.

''பெண்மணி யேநன் மணியே பெரிய குருமணியே
விண்மணி யேபொன் மணியே வடிவேலன்
தாய்மணியே
தண்மணி யேவான் புகழும் சிவனார் மன மணியே''

என்று மணி என்னும் சொற்பின்வரு நிலையணியாக அமைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

சிறந்த இலக்கியம் ஒரு கவிஞனின் படைப்பு மட்டும் அன்று; அது காலத்தின் படைப்பும் ஆகும். கவிஞனின் உணர்ச்சியிலும் சிந்தனையிலும், வெளிப்பாட்டிலும் அவர் வாழும் காலத்தின் பிரதிபலிப்பு உறுதியாக இருக்கும். அதற்கு ஏற்ப இக்கொப்புடைய நாயகி அந்தாதியிலும், இவ்விருபதாம் நூற்றாண்டின் பிரதி பலிப்புக் காணப்படுகின்றது.

''கொப்புடையாள்......அடியவர்கள் உழைப்பை
மதிப்பாள்''

என்றும்,

''கேள்வி தொடுப்பார் தமக்குக் குணமாய்
விடைதரவே,
தாள்பணிந்தே தாயே தாவென்றுநான் உனைக்
கேட்பதெல்லாம்
நீள் பெருஞ் சிந்தனை நல்குவாய்,'

என்றும்,

''பாவிகளும் கூப்பிட்டால் போதும் கொடுப்பாள் அருளினைக்
கோடியாக''

என்றும் வரும் கவிதை வரிகள் இதற்குச் சான்றாகும். இறைவியின் அளவில்லாக் கருணையை இவ்வரிகள் எடுத்து இயம்புகின்றன.

இவ்வண்ணம் எழில்வண்ணக் கவிமாலையால் அம்பிகையை வாழ்த்தி ஏத்தும் குறட்பித்தனின் புத்திலக்கியம் ஓர் இனிய தமிழ் விருந்தாகவே அமைந்துள்ளமையைப் பெரிதும் பாராட்டி, அவர் மேலும் இத்தகைய தமிழ்க் கவிதைகளையும் காப்பியங்களையும் தமிழன்னைக்குச் சூட்டிப் புகழ்பெற வாழ்த்துகின்றேன்.

அன்புடன்

**இராதா. தியாகராஜன்**

24—1—89
காரைக்குடி



## வாழ்த்துரை

மாண்புமிகு ஆர். எம். வீ. அவர்கள்
முந்நாள் அறநிலையத்துறை அமைச்சர்
"செல்வி"
9. திருமலைச்சாலை, சென்னை—600017

என் அன்பிற்கினிய நண்பர் காரைக்குடி ஆ. குறள்பித்தன் அவர்கள் வடித்திருக்கும் "அருள்மிகு கொப்புடையநாயகி அம்மன் அந்தாதி" நூலைப் படித்து நான் பெருமகிழ்வு அடைந்தேன்.

முந்நாளில் அபிராமிப்பட்டர் திருக்கடவூரில் கோயில் கொண்டிருக்கும் அபிராமி அன்னைக்குப் பதிகமும், அந்தாதியும் பாடிப் பெருமை பெற்றதைப்போல் இந்நாளில் கவிஞர் குறள்பித்தன் அவர்களும் காரைக்குடியில் கோயில் கொண்டு விளங்கும் அருள்மிகு கொப்புடையநாயகி அம்மனுக்குப் பதிகமும், அந்தாதியும் பாடி சிறந்த ஆன்மீகச் சித்தராக சமய உலகிற்கு தம்மை அறிமுகம் செய்து கொண்டு உள்ளார்.

"முந்நாளில் பதினெட்டுப் பேரோடு பல்லோர்கள்
மொழிந்ததைப் படித்துவிட்டேன்"

என்று சித்தர்கள் பாடல்களிலும், சமய இலக்கியங்களிலும் தமக்குள்ள பற்றினைக் கவிஞரே ஓரிடத்தில் எடுத்துக் காட்டியிருப்பது கொண்டு, பலகாலமும் முன்னோர் மொழி பொருளைப் பொன்னேபோல் போற்றிப் பயின்று, தாமும் அத்தகையதொரு மணிமகுடமான பக்தி இலக்கியத்தைப் படைக்க வேண்டும் என்ற ஆர்வம் கொண்டு ஆசிரியர் முயன்று இந்நூலை உருவாக்கி இருப்பதை நான் உணர்கிறேன்.

மேலை நாட்டு அறிஞர் ஒருவர் "நீ கடவுள் இருக்கிறாரா இல்லையா என்று கேட்காதே, கடவுள் வேண்டுமா வேண்டாமா என்று கேள்" என்று கூறியிருக்கிறார். ஏனென்றால் கடவுள் இருக்கிறாரா இல்லையா என்று ஆராய்ந்து பார்ப்பதற்கு மனிதனுக்கு அறிவும் போதாது' ஆயுளும் போதாது.

மனிதனுக்கு உணவு. உடை, இருப்பிடம் மாத்திரம் முக்கியமல்ல. அவனை மனிதன் என்று சொல்லவேண்டுமானால் அவன் மனிதனாகத் தன்னை மாற்றிக்கொள்ள வேண்டும், உருவத்தினால் மனிதர்களாக இருப்பவர்கள் எல்லாம் மனிதர்கள் அல்ல. அவர்கள் உள்ளத்தினாலே பண்புள்ளவர்களாகத் திகழவேண்டும், அத்தகைய மனிதர்களை உருவாக்குவதற்குத்தான் கடவுள் நம்பிக்கையும் ஆலயங்களும் சமய இலக்கியங்களும் மிக மிக அவசியமாகின்றன.

ஆகவே தொடக்கத்தில் கடவுளை மறுத்து நாத்திகம் பேசும் பலரும்கூட முடிவில் சிந்திக்க சிந்திக்கச் சமுதாய மேம்பாட்டிற்கு தெய்வநம்பிக்கை மிக மிக' அவசியமே என்பதை ஏற்றுக்கொள்ளவே செய்வார்கள். அதைத்தான் சமய குரவர்களில் ஒருவரான திருநாவுக்கரசரும்

"விறகில் தீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளான் மாமணிச் சோதியான்
உறவுக்கோல் நட்டு உணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே"

என்று தம் தேவாரத்தில் தயிரினைக் கடைய நெய் கிட்டுவதுபோல உள்ளத்தில் பக்திக் கோலினை நட்டு உணர்வுக் கயிற்றினைக் கொண்டு கடைய தெய்வம் உண்டு என்கிற தெளிவு பிறக்கும் என்று விளக்கியிருக்கக் காண்கிறோம்.

அதைப்போலவே கவிஞர் குறள்பித்தன் அவர்களும் பலகாலம் தெய்வ உண்மையை உணராமல் இருந்திருக்கிறார். இதனை அவரே,

''புத்தியைச் செலுத்திநல் பக்தியைத் தேடிடும்
பாதையை மறந்திருந்தேன்
பாவிநான் பலகாலும் பகுத்தறி வின்றியே
பாதகம் பேசி வந்தேன்''

என்று இந்நூலிலும் பாடியிருக்கக் காண்கிறோம்.

கடவுள் இல்லை என்று கூறுவது போலியான பகுத்தறிவு. கடவுளை உண்டு என்று நம்புவது தான் மெய்யான பகுத்தறிவு, இதனைக் கவிஞர் தெளிந்து கொண்ட மேன்மையைத்தான் மேலே ''பகுத்தறிவின்றியே பாதகம் பேசி வந்தேன்'' என்றதொடரால் உணர்த்தியிருக்கக் காண்கிறோம்.

மனிதன் தன்னுடைய அறியாமையை ஒத்துக் கொள்ளும்போதுதான் அவனுடைய அறிவும் தெளிவுபெறுகிறது. தெளிவான அறிவுப்பாதையில் அவன்தொடர்ந்து செல்லும் போதே சமுதாயத்திற்குப் பயன்படக்கூடிய பேரறிஞனாக-மேதையாக -ஞானியாக அவன் உயர்கிறான். கவிஞர் குறள்பித்தன் அவர்களுடைய இக்கவிதை நூலும் பேதையாக இருந்து மேதையாக உயர்ந்தகவிஞரின் சிந்தனைச் சிறப்பை நமக்கு உணர்த்துவதோடு அவரைப்போல மற்றவர்களையும் உயர்த்த வழிகாட்டுகிறது.

மேலும் இத்தகைய தொரு சிறந்த சமய நூலை அவர் தமிழுலகிற்குத் தரவும், அதைப் பெறவும் செட்டிநாடு மிகச் சிறந்த தவம் செய்திருக்கிறது. காரணம், செட்டிநாட்டின் சமயத் தொண்டினையும், தமிழ்த் தொண்டினையும் இந்நூலில் கவிஞர் மிக உயர்வாகச் சிறப்பித்திருக்கிறார்

"தேவாரம் தினஞ்சூடி துதித்திடும் சான்றோர்கள்
திகழ்கின்ற செட்டி நாட்டின்
காரைமா நகர் வாழும் கண்கண்ட தெய்வமே
கொப்புடைத் தேவி உமையே"
"பைந்தமிழைப் பரப்பிடும் பணியிலே பேர்பெற்ற
பாங்கான செட்டி நாட்டின்"
காரைமா நகர்வாழும் கண்கண்ட தெய்வமே
கொப்புடைத் தேவி உமையே"
"பொய்யா மொழிப்புலவன் கொய்யாக் கனிக்குறளைப்
பாராட்டும் செட்டி நாட்டின்
காரைமா நகர்வாழும் கண்கண்ட தெய்வமே
கொப்புடைத் தேவி உமையே"

எனப்பலப்பல பாடல்களில் தாம் வளர்ந்தசெட்டிநாட்டின் சிறப்புகளை வாஞ்சையோடு எடுத்துக் காட்ட கவிஞர் குறள்ஃபித்தன் மறக்க வில்லை,

இந்நூல் வாயிலாகக் காரைக்குடியினரின் கண்கண்ட தெய்வமான அருள்மிகு கொப்புடைய நாயகி அம்மனைத் தமிழகம் எங்கும் வாழும் தமிழ்மக்களின் கண் கண்ட தெய்வமாக்கிவிட்ட பெருமை கவிஞருக்கே உண்டு இந்நூலைப் பயில்வார் சீரைப் பெறுவார், இறையருள்காண்பார் சுகம் பெறுவார், பேரைப் பெறுவார் என்பது உறுதி. காதலாகிக் கசிந்துருகிப் பாடவல்ல கற்கண்டுப் பாடல்களால் அருள்மிகுகொப்புடையநாயகி அன்னையின் புகழை அவனி அறியச் செய்த அருமை நண்பருக்கு என் மனம் கனிந்த நல்வாழ்த்துக்களை அன்போடு தெரிவித்து வாழ்க வளர்க என வாழ்த்துகிறேன்.

24-10-88
சென்னை

அன்புள்ள
இராம. வீரப்பன்

உ

நலம் பொலிக

# அணிந்துரை

தெ. முருகசாமி
முதல்வர்
இராமசாமி தமிழ்க் கல்லூரி
காரைக்குடி–1

ஆர்ப்பரிக்கும் அரசியல் ஆரவாரங்களுக்கிடையே தம் வாழ்வைத் தொடங்கி அங்கு ஏற்படும் மனக்கசப்பை மாற்றிக்கொள்ள ஆன்மீகத்தைநாடிய சிலருள் காரைக்குடி குறள்பித்தனாரும் ஒருவர். அவர் பரபரக்கும் இச்சமுதாயச் சந்தடியில் தம்மை இன்னாரென அடையாளம் காட்டிக்கொள்ளவேண்டிக்காரைக்குடி கொப்புடையம்மன் மீது அரியதோர் அந்தாதி நூலைப் பாடியுள்ளார். இது படிப்பார் தெய்வப்பித்து ஏறும் வகையில் நல்ல தமிழில் பாடப்பட்டுள்ளது.

நாளெலாம் பரந்த வெளியில் மேய்ந்து திரிந்து புலலார்ந்த பசு மாலையில் தன் தொழுவடைந்து மேய்ந்ததை அசைபோடுதல் போல் பிறவிதோறும் அலைந்து திரியும் ஆன்மா அமைதி தேடும் பயணத்தில் கண்டுகொண்ட நற்புகலிடமே இறையருள் என்பதை இந்நூல் மையப்படுத்திக் காட்டுகிறது. 'எந்த நிலையிலும் என்மனம் உன்னிடம் நின்றிடுமே! (6) எனப் பாடல்களின் தொடக்கத்தில் அன்றாடம் அனுபவிக்கும் உலகியலின் உளைச்சலைக் கோடிட்டுக் காட்டும் கவிஞர் மனம் அடைய வேண்டிய வழியைப் பற்றி மற்றோர் பாடலில்,

'மனமேநீ கொப்புடை மாதாவை எண்ணி மகிழ்ந்
திடுவாய்

தினமே அவளது பொற்கோயில் தேடிநீ சென்றிடு
வாய் (22)

என விளக்குகிறார்.

'பேசுவதால் பயனில்லை அவரவர் அனுபவத்தால் எய்துவதே ஞானம்' என்ற பாரதியின் வாக்கைப்போல் கற்பார் அனைவரும் தத்தம் வாழ்வின் உண்மையை உணர்ந்து தாமே பாடுவார்போல இந்நூல் பாடப்பட்டுள்ளது. 'தெள்ளத் தெளிந்த நடையில் உண்மை தெரிய உரைப்பது கவிதை' என்ற கவிமணியின் கவிதை இலக்கண வரையறைகள் இந்நூலுள் உறுதிப்படுத்துவனபோல் பாக்கள் யாவும் தெளிந்த நீரோட்டமாகச் சிக்கலின்றிச் செறிவாகப் பாடப்பட்டுள்ளன.

எளிய பதம், தெளிந்த சொல்லாட்சி முதலியவை எளிதில் பாட்ல்களை மனப்பாடம் கொள்ளச் செய்யும் வாய்ப்பை நல்குகின்றன. பொதுவாக ஆரவாரம் மிக்க சொற்கட்டு, கற்பனை முதலியவை ஒரு நூலின் புறஅழகைத்தரும். ஆனால் பொருட்புலப்பாடே அகஅழகு. இந்த அடிப்படையில் காரைக்குடியின் நடுவாகக்கோயில் கொண்டு எல்லார் அகத்திலும் தங்கிக் குடிபுறங்காத்தோம்பும் கொற்றவையாய் வீற்றிருக்கும் கொப்பாத்தாவின் அந்தாதிப் பாக்கள் தமிழிலக்கண வரம்பில் கொஞ்சமும் பிசகாமல் அகஅழகை அள்ளித் தருகின்றதென்பதில் ஐயமில்லை, அம்மையின் பேரருள்போல் பெருக்கெடுத்தூறும் சம்பை ஊற்றாகக் கவிஞர் இதனைக் கட்டளைக் கலித்துறையில் சந்தமாகப் பாடியுள்ளார்.

தேவியின் திருக்கோயில் நாற்றிசையும் வாணிபப் புழக்கத்திற்குரிய இடங்களுக்கு நடுவண் அமைந்துள்ள தால் வாணிபர்களும். ஊர்மக்களும் வெளியூரினரும் அம்மையைத் தினமும் வந்து வழிபடுகின்றனர் என்பது உண்மையே, இதனைக் கவிஞர், 'சனமே விடுசன்னதி'(22) என்றும் 'பழுத்த அறிஞர் பரவிடும் பாவையே' (27) என்றும் சிறப்பாகச் சுட்டியுரைக்கின்றார். காரைக்குடி நகரின் வீதித் தலைவி' (36) எனப் பாராட்டும் பாடல்வரி ஒன்று இக்கோயில் தெய்வத்தின் மீது காரைக் குடியினர்க்குள்ள பற்றை நன்கு விளக்குவதாக உள்ளது,

செல்வச் சிறப்பும், தீந்தமிழ்ச் செல்வமும் அறாத காரைக்குடியிலுள்ள இத்திருக்கோயிலில் ஒவ்வொருநாள் காலையிலும், மாலையிலும் திருமுறை வாணர்களால் திருமுறைகள் ஓதப்படும் நியதியை மனதில்கொண்டு கவிஞர் இக்கொப்புடைநாயகி தினமும் தெய்வத் தமிழ் கேட்கும் 'திருமுறைக் கொப்புடைத் தாயாக'க் (23) காட்சியளிக்கிறாள் எனப் புகழ்கிறார்' இப்புதிய சொல் லாட்சி நினைக்க நினைக்க இன்பந்தரும் ஒன்றாகும்.

'தீந்தமிழ்ப்பா மாலை புனைவேன்' (58) 'வேரிற் பழுத்த பலாத்தமி ழாலுன்னை வாழ்த்துவேன்' (64) என்றெல்லாம் இறைவியைத் தீந்தமிழால் வழிபட நினைக்கும் கவிஞர் "கொப்புடையநாயகி" என்ற சொல் லையே தமிழ் மந்திரமாகக் கொண்டால் இன்ன பேறுகள் கிட்டும் எனக் கூறுவது (30) 'தமிழும் தேவியும் ஒன்றே' என உறுதிப்படுத்துவதோடு தமிழ் அருச்சனையை வற்புறுத்துவதாகவும் உள்ளதென்பது உள்ளங்கை நெல்லி யாம்.

இந்நூலுள் ஊர், கோயில். புராணக் கூறுகளோடு கூடிய தெய்வம் முதலியன பற்றிப் பரக்க பேசப்பட்டாலும் இத்திருக்கோயிலின் கொப்புடையம்மன் தெய்வத்திருமேனி மூலவராகவும் உற்சவராகவும் உள்ளதென்ற தனித்தன்மை யைச் சுட்டத்தவறியதைக் குறையாகக் கூறலாம். எனினும் எல்லாவகையாலும் தெய்வத் தமிழ்கொஞ்சும் இந்நன்னூல் அனைவராலும் படித்து மகிழத்தக்க ஒன்றாகும் எனச் சிறப்பாகப் பாராட்டுகின்றேன்.

...தாயே தாவென்று நானுன்னைக் கேட்பதெல்லாம் நீள்பெருஞ் சிந்தனை நல்குவாய் ஆற்ற நிகழ்ச்சிகளே (59) எனக் கவிஞர் வேண்டும்விருப்பமே ஒவ்வொருவரும்கேட்கும் வேண்டுதலாக அமைந்துள்ளது சிறப்பிற்குரியதாகும். இதுவே இந்நூல் கற்பார் கொள்ளும் பயன் என அணிந் துரைக்கின்றேன்.

இத்தகு நூல் வெளிவருவது கண்டு மிகவும் மகிழ் கிறேன், பைந்தமிழ் நலஞ்சார்ந்த குறள்பித்தனாரும் பாராட்டுக்குரியவராவார். ஆன்மீக அன்பர்களும் பிறரும் இதனை வாங்கிப் படித்துப் புண்ணியம் பெறுவார்களாக.

காரைக்குடி
16-2-88

தெ. முருகசாமி



## பாவலர் மணி புலவர் ஆ. பழனி
அவர்களின்

# வாழ்த்துரை

என் இனிய நண்பர் ஆ. குறள்பித்தன் காரைக்குடி கொப்புடையநாயகி அந்தாதி பாடியுள்ளார். தமிழில் வழங்கும் சிற்றிலக்கிய வகையில் அந்தாதியும் ஒன்று.

மழை பொழிகின்றது. வெள்ளம் பல கால்களாகப் பிரிந்து செல்கின்றது. ஏன் பல கால்களாகப் பிரிந்து செல்லவேண்டும்? அது தரையின் அமைப்பைப் பொறுத்தது அதுபோல்தான் மனித மனமும். கற்றலால் அறிவு திறள் கின்றது. திரண்ட அவ்வறிவு எல்லாருக்கும் ஒரே நெறியிற் செயல்படுவதில்லை. ஏன்? அது சூழ்நிலையைப் பொறுத்தது. நண்பருடைய மனம் பக்திநெறியிலே படரத் தொடங்கி புள்ளது.

இவ்வந்தாதியுள் வரும் கருத்துக்கள் எனக்கு உடன்பாடானவை அல்ல. ஆனால் இக்கருத்துக்களைத் தாங்கிவரும் தமிழ் எனக்கு உடன்பாடானது மட்டுமன்று உயிரானதும்கூட. அதனால்தான் இதனை எழுதுகின்றேன்.

ஏறத்தாழ முப்பது ஆண்டுகளாகத் திருவாளர் குறள்பித்தன் அவர்களை அறிவேன், நான் முதன் முதலாக பார்த்த குறள்பித்தனையும் இவ்வந்தாதியை இயற்றிய குறள்பித்தனையும் ஒப்பிட்டுப் பார்க்கிறேன். என்கண்கள் வியப்பினால் விரிவடைகின்றன.

பிய்த்துத் தின்னும் வாழ்க்கை அவலங்களின் ஊடே எடுத்தடி வைக்க முடியாமல் அழுத்தும் குடும்பப் பெருஞ் சுமைக்கு மத்தியில், சுழற்றியடிக்கும் அரசியல் அலைக்

கழிவுகளுக்கிடையே எப்படி இத்தமிழறிவை வளர்த்துக் கொள்ளமுடிந்தது?

சிலருடைய கண்கள் எங்கெங்கோ மேய்ந்து திரியும். இவருடைய கண்கள் பழைய புத்தகங்கள் விற்பனை செய்யும் கடைகளைத்தான் முற்றுகையிட்டிருக்கும். கண்டது கற்கும் அவருடைய ஆர்வம் இன்று அந்தாதி பாடும் பண்டிதராக அவரை உயர்த்தியிருக்கின்றது.

வெண்பாவும், அதற்கடுத்தபடியாகக் கட்டளைக் கலித்துறையும் தான் பாடுதற்கரிய இலக்கணக் கட்டுப் பாடுகளை உடையன. இத்தகைய கட்டளைக் கலித்துறை யையே பாடு கருவியாக அவர் தேர்ந்தெடுத்திருப்பது அவருக்குள்ள யாப்பிலக்கண அறிவையும் துணிவையும் வெளிப்படுத்துகின்றது.

தமிழ் பலவேறு துறைகளைக்கொண்ட மொழி. அத்துறைகளிலே ஒன்றுதான் பக்தி. எஞ்சிய துறைகளிலும் அவர்தன் பார்வையைச் செலுத்தவேண்டும் என்பது என் அவா. அவருடைய தமிழறிவு வளர்ச்சிக்குக் காரணர் களாக இருந்தவர்களிலே நானும் ஒருவன். ஆகவே என் விருப்பம் நிறைவேறும் என்று நம்புகிறேன்.

திருவாளர் குறள்பித்தன் அவர்களின் இலக்கிய ஆக்கங்கள் வெற்றிபெற என் வாழ்த்துக்கள்.

அன்பன்

ஆ. பழனி

இடம்: காரைக்குடி
20–2–88



உ

ஓம்

# அணிந்துரை

கலைக்காவலரி
தங்கபஸ்பம் அதிபர்
தலைவர், தமிழிசைச் சங்கம்
காரைக்குடி.

என் இனிய நண்பர், எழுச்சிமிக்க பேச்சாளர், ஆ. குறள்பித்தன் அவர்கள், தேனினும் இனிய தீந்தமிழில் அந்தாதி பாடி அன்னை பராசக்தியை அணி செய்திருக்கிறார். இத்தகு பேராற்றலை நண்பர் குறள்பித்தன் எங்கிருந்து பெற்றார் என்பதனை ஆழ்ந்து சிந்தித்தேன். மகாகவி பாரதி விடைதரும் திறங்கண்டு வியந்தேன். அன்னையைச் சரண் அடைந்தால், யாவும் அவள் தருவாள் இந்த உண்மையை உலகுக்குப் பறைசாற்றுகின்ற வரலாறுகள் பலஉண்டு. அந்தாதி பாடிய அபிராமபட்டர், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் இசைத்த குமரகுருபரர், மகாகவி காளிதாசன் போன்றோர் அன்னையின் திருவருள் பெற்ற ஞானச் செல்வர்களல்லவா. அன்புறு சிந்தையின் மேல் எழும் அவ்வொளி என்பதும் ஆன்றோர் வாக்கு. ஆசிரியர் குறள்பித்தன் அவர்களின் உள்ளமும் பக்தி வான் மழையில் நனைந்து, அமுதெனும் தீந்தமிழில் தோய்ந்து அந்தாதி எனும் அணிகலன் அன்னைக்குச் சூட்டியதில் வியப்பில்லை. அன்னையின் அருள்திறம் பெற்ற தன்மையை ஆசிரியர் வாக்காலேயே காண முடிகிறது.

"துதித்துத் துதித்தே, தொடர்ந்துமே காண்பார்க்குள் நல்லொளியை
பதித்துப் பதித்தே பரிவாகப் பார்த்திடும் பார்வதியே"

, என்று தன் அனுபவத்தை ஆசிரியர் விளக்கும் திறம் பாராட்டுக்குரியது. காரை மாநகரில் நடுநாயகியாக கொலுவீற்றிருந்து அருளாட்சி புரியும் அன்னை கொப்புடையாளின் அருள் நலத்தை தமிழ் உலகும் பெற வேண்டுமென்ற ஆசிரியரின் பேருள்ளம் கண்டு போற்று கிறேன். பக்திநெறி தமிழகத்துக்கு புது நெறி அன்று. தமிழினத்தின் உயிர்நெறியே. பக்தி நெறி என்பது உபசார வழக்கன்று.

ஆனால் பக்திநெறி அறுகிவரும் இக்காலத்து இது போன்ற பக்தி மனங் கமழும் பாக்கள் தீந்தமிழில் படைத்தல் காலத்துக்கேற்ற பணியே யாகும். தமிழ் அன்னைக்கு அணிசேர்க்கின்ற முயற்சியில் ஆசிரியர் குறள்பித்தன் அவர்கள் இன்னும் பல நூல்களை வெளியிட வாழ்த்துகிறேன். அன்பர் குறள்பித்தன் அவர்களுடைய இத்தொண்டுக்கு அருள்மிகு கொப்புடைய நாயகியாள் ஆக்கமும், ஊக்கமும் தந்து அருள்பாலிக்க வேண்டு மென்று விண்ணப்பித்துக் கொள்கிறேன். வளர்க ஆசிரியர் குறள்பித்தன் அவர்களின் தமிழ்த் தொண்டு.

காரைக்குடி அன்பன்

30-3-'88 நா. ஆ. மாரிமுத்து

## மதிப்புரை

பொற்கிழிக் கவிஞர்
"காசிஸ்ரீ" அரு. சோமசுந்தரன்

மெய்யன்பர் திரு. குறள்பித்தன் அவர்கள் பக்தியோடு இயற்றி உள்ள "காரைக்குடி கொப்புடைய நாயகி அந்தாதி" என்ற இனிய நூலை இன்று அவர் முன்னிலையில் முழுதும் படித்துப் பரவசம் அடைந்தேன். அரசியல் நெறியில் அடிபரவும் அன்பர், இன்று அன்னை கொப்புடையாளின் அடிக்கமலம் தொழும் பணியும், பாணியும் என்னை மிகவும் ஈர்த்தன. அன்பர் திரு. குறள்பித்தன் அவர்களை நான் பன்னெடுங் காலமாக அறிவேன். அவர் பல நூல்களை ஆழ்ந்து படித்தவர்: அயராமல் சிந்தித்தவர். அப்பர் சுவாமிகள் போல இன்று அவர் தெய்வநெறியில் திளைக்கும் பாங்குகண்டு பாராட்டுகிறேன். அதனை அவரே பாடுகிறார்.

'இனியொரு பொல்லா இடர்எனைத் தீண்டா தேற்றருளே'

என்கிறார். பாடலை முடிக்கும் தறுவாயில்

"வாழ்வருள் காரைக் குடியுன் திருக்கோயில்
வந்தடைந்தேன்
தாழ்வினி வாராது காப்பாய் தமிழே! கடந்த நாளின்
ஊழ்வினை தீர்த்தே உவகைப் புதுவாழ்வும் ஓங்கிடவே
ஏழ்இசை நாயகி! கொப்புடையாள்! எனை ஏற்றருளே!

என உருகிப் பாடுகிறார்.

"பலாச் சுவைத் தமிழ்" என்று அவரே பாராட்டும் இனிய த்மிழால் கொப்புடைய நாயகியின் குணங்களை- ஆற்றலை - அழகை - அருளைக் கொண்டாடும் கோலங் களில் நம்மையும் அறியாமல் நாம் ஈடுபடுகிறோம்.

"வாழ்த்தும் அடியார்தம் வாழ்வை உயர்த்திடும்
வான்மகளே!
செழித்த புகழும் சிவநோக்கும் சேர்த்திடும்
செம்பொருளே!
பழுத்த அறிஞர் பரவிடும் பாவையே! பால்நிலவே!
எழுத்தும் படிப்பும் எனக்கென்றும் குன்றாது
தந்தருளே."

என்று கொப்புடையாளிடம் தளராத கல்வி வரம் கேட்கிறார் கவிஞர். அவரது பழுத்த அனுபவமும், பண்புசான்ற நடைமுறையும், குன்றாத கல்விக்கு அன்னை யின்பால் ஏங்குவதால் குறையாத செல்வமும், கல்வியும் அன்னை அளிப்பாள் என்பதில் ஐயமில்லை.

கொப்புடையாள் தலத்தைப் பாடல்பெற்ற தலமாக்கி வன்றொண்டர் வரிசையில் வளர்ந்திருக்கும் அன்பர் குறள்பித்தனுக்கு என் பாராட்டுக்களும், நல்வாழ்த்துக் களும் உரியன. அவரை பக்திநெறிப்படுத்திய அன்னை கொப்புடையாளின் அடிமலரை வணங்கி உய்வோமாக.

காரைக்குடி
29-2-1988

அரு. சோமசுந்தரன்

## பாராட்டுரை

## ஆசிரியர் இனக்காவலர்

முருகனடிமை **எம். கே. முத்து** அவர்கள்

பகுத்தறிவுப் பாசறையிலே ஆர்ப்பாட்டமாகப் பேசிவந்த திரு. குறள்பித்தன் அவர்கள் அன்னை கொப்புடையநாயகி அருள்பெற்று அந்தாதி பாடியிருக்கிறார். அன்னாரது ஆழ்ந்த புலமையும், அடங்கிய பண்பும், ஓங்கும் தமிழ்ப்பற்றும் ஒப்பற்றதோர் காவியத்தைப் படைக்கும் ஆற்றலை வழங்கியிருக்கிறது பல் உடைபடும் சொல் சிலம்பமாடாமல் எளிமையாகவும் இனிமையாகவும் பழகு தமிழில் பாடியிருக்கிறார். காதலாகிக் கசிந்துருகிப் போற்றுவார் எல்லாம் புகழ் பெறக் கொப்புடைய நாயகியாள் "ஏற்றம் தருவாள்"! "எந்நாளும் ஊற்றாய் இருப்பாள்," மற்றும் "உவந்தே அளிப்பாள் நிதிகளுமே" என்று அவரே பாடியிருப்பது போல ஒப்பு உவமை இல்லாக் கொப்புடையாளின் இவ்வந்தாதியைப் பாராயணம் செய்பவர்க்குத் தன் அருள் பாலித்திடுவாள் என்பதை நானும் ஏற்று உளமாற உரைக்கின்றேன். உண்மை இது; எள்ளவும் சந்தேகமில்லை எனச் சாற்றுகின்றேன்.

அன்பன்

**காளிமைந்தன்**

(முத்து & சுவாமி, எம். கே. முத்து)

3. அருணாசலம் செட்டியார் தெரு
செக்காலை
காரைக்குடி-2

## பாராட்டுரை

முருகனடிமை

**மு. கணேசன் அவர்கள்**

அருள்மிகு கொப்புடைய நாயகியின் மீது அருமை நண்பர் ஆ குறள்பித்தன் அவர்கள் எழுதிய அந்தாதியைப் படித்துப் பெருவகை அடைந்தேன்.

தமிழ்த்தாய் வாழ்த்துடன், பதிகமும்பாடி அந்தாதியை எளிய இனிய தமிழில், நடையில் எழுதி உள்ளார். அவை களை முழுதும் படித்து மகிழமுடிந்ததே தவிர ஆய்வு செய்து கட்டுரை எழுத என்னால் இயலவில்லை ஆனாலும்,

"சிந்தையள்ளும் பூங்காற்றே சிரிக்கின்ற தேன்மலரே!
சந்தனத்தில் குளித்தமயிலே", என்றும்
"சொக்கனது மடியிலே சுகங்காணும் மீனாட்சி
சொந்தநகர் வளர்ந்த தமிழே"

என்றும் அவர் தமிழை வாழ்த்தும் சொல்லாட்சியை என்னால் பாராட்டாமல் இருக்கமுடியாது.

"நீங்காத்துயர்கலைய நின்முகம் பார்க்கின்ற
நின்னடி யார் முகத்தை—
நீ கொஞ்சம் பார்த்திட்டால் நிற்குமோ அவர்குறை
நாயகி நோக்கிடம்மா" என்றும்

அன்னை கொப்புடையாளை பதிகத்தில் கேட்கின்ற பாங்கும்-அந்தாதியில் பல்வேறு இடங்களில் மாந்தர் அனைவருக்கும் நலம் பயக்க வேண்டுகின்ற முறையும் எப்படிப் பாராட்டினும் தகும். அருமை கவிஞர் குறள்பித்தன் அவர்களின் பணி மேலும் தொடர தமிழ்த் தெய்வமாம் தேவி கொப்புடையாளின் அருள்முழுதும் கிட்டிட பிரார்த்தித்து வாழ்த்துகின்றேன்.

6—2—89 அன்பன்,

காரைக்குடி **மு. கணேசன்**

# முன்னுரை

அருள்மிகு அன்னை கொப்புடைய நாயகியின் மீது நான் அந்தாதி பாடும் அளவிற்குப் பக்தியில் ஊறியவனோ பைந்தமிழில் தேறியவனோ இல்லை. தமிழன்னைக்குக் கோவில்கட்டி தமிழ்ப்பெரும் புலவர்களுக்கெல்லாம் விழா எடுத்துப் பெருமை சேர்த்துக் களிப்புறும் காரைக்குடிச் சான்றோர் முன் நிற்கவும் - நின்று பேசவும் அருகதையற்ற என்னை அந்தாதி பாடவைத்தது அன்னை கொப்புடையாளின் அருள் ஒன்றுதான் என்பதைத் தவிர வேறொன்றுமில்லை

சில ஆண்டுகளுக்கு முன் தமிழக அரசின் சுற்றுலாத் துறையின் செயலராகப் பணியாற்றிய திருமிகு. இரா. கிருபாகரன் I.A.S. அவர்களின் உதவியால், தமிழகமெங்கும் உள்ள இந்து ஆலயங்களுச்குச் சென்று பார்த்து-ஆங்குள்ள அரிய பெரிய கலைச் சிறப்புக்களை – அற்புதங்களைத் தொகுத்து - வெளிநாட்டுச் சுற்றுலாப் ப்யணிகளுக்குப் பயன்படும் வகையில் தருகின்ற பெரும்பேறு எனக்குக் கிட்டியது. அதன் விளைவாக என் உள்ளத்தில் மறைந்திருந்த இறையுணர்வு வெட்கமின்றி வெளித்தோன்றியது. அதன்பின் எழுதியதே இவ்வந்தாதி.

உலகின் முதன்மொழியாம் உயர்தனிச் செம்மொழி தமிழ் இலக்கியக் கடலின் முத்துக்களில் அந்தாதி என்பதும் ஒன்றாகும். இது சிற்றிலக்கிய வகை என்றும்- இவ்வந்தாதி சுமார் இருபத்து ஓர் வகைக்கு மேற்பட்டது என்றும் சாற்றுவர் சான்றோர். அவ்வந்தாதிகளுள் தகுதியும் தலைமையுமாய் விளங்குவது அன்னை அபிராமி அந்தாதியேயாகும்.

சொல், பொருள், யாப்பு-அணி, அருள்மணம், தமிழ் மணம் கமழ்ந்து சிறந்து விளங்குவதுமாகும். அதைப் பாடிய பெரும் புலவன் தெய்வப்புலவன். எனக்கு அத்தகுதி சிறிதும் இல்லை. எனவே இவ்வந்தாதியைக் கண்ணுறும் பெருமக்கள், அபிராமி அந்தாதிச் சிறப்புக்களை எதிர்பார்த்தால் ஏமாற்றம் ஏற்படும். குருடன் குளிர் நிலவைக் கண்டல்ல — கேட்டு இன்புறுவதைப்போல், கல்லாக் கடையன் ஏதோ அவாவினால் இவ்வந்தாதியைக் கட்டளைக்கலித்துறையால் பாடி உள்ளேன். இதிலும் ஏதேனும் சிறப்பிருப்பின் அது அன்னை கொப்புடையாளின் கொடை என்றே கொள்வேன்,

புதையல் எடுத்துவிட்ட வறிஞனைப்போல் துள்ளிக் குதித்துக்கொண்டு, எனக்குத் தமிழறிவும் - யாப்பறிவும் ஊட்டிய காரைமாநகரின் பெரும் புலவர் பாவலர் மணி ஆ. பழநி அவர்களிடம் இவ்வந்தாதியைக் கொடுத்து நின்றேன். முடக்குழவி என்றாலும் முத்தமிட முகம் சுளிக்காத அன்னையைப்போல் என்னை வியந்து நோக்கிப் பாராட்டி வாழ்த்துரை தந்து ஊக்கிஉள்ளார்கள். முன் பின் அறிமுகமில்லாத, முதிர்ந்த தமிழறிஞர் காரைக்குடி இராமசாமி தமிழ்க்கல்லூரியின் முதல்வர் திருமிகு தெ. முருகசாமி அவர்கள் இவ்வந்தாதிக்குக் கொடுத்துள்ள அணிந்துரை எனக்கு தமிழ்க்கல்லூரி தந்த பட்டயமாகும்.

கவிக்கோ காசிஸ்ரீ அரு. சோமசுந்தரனாரின் அன்புரை இவ்வந்தாதியை மேன்மைப்படுத்தி உள்ளது, இதைப்போல், ஆசிரியர் இனக்காவலர் அய்யா திருமிகு, எம். கே. முத்து அவர்கள், அன்னை கொப்புடைய நாயகி அம்மன் திருக்கோவிலின் அறங்காவலர் அய்யா தங்கபஸ்பம்

என். ஏ, மாரிமுத்துப்பிள்ளை அவர்களும், தமிழக அரசின் முந்நாள் அறநிலையத்துறை அமைச்சர் திருமிகு இராம. வீரப்பன் அவர்களும், அந்தாதியைப் படித்து மகிழ்ந்து ஆசியுரை வழங்கியமைக்கு நான் என்றும் **நன்றி** உடையவனாவேன். இவற்றிற்கெல்லாம் மேலாக வள்ளல் அழகப்பா பல்கலைக்கழக துணைவேந்தர் **அன்னை டாக்டர் இராதாதியாகராசன்** அவர்கள் இவ்வந்தாதிக்குத் தங்கத்தேரையும் - நடமாடும் நற்றமிழ்த்தெய்வம் **தவத்திரு குன்றக்குடி அடிகளார்** சுவாமிகள் இவ்வந்தாதிக்கு வைரக் கிரீடத்தையும் வாழ்த்துரைவடிவில் வழங்கிஇருக்கிறார்கள் இதைவிட எனக்கு வேறென்ன வேண்டும்? இவர்களுக் கெல்லாம் நன்றியுடன் வாழ அன்னை கொப்புடையாள் எனக்கு நல்லறிவை நல்க வேண்டுகிறேன்.

இவ்வந்தாதியை அன்னையின் அருளால் நான் எழுதி விட்டு ஓராண்டுக்காலமாக அச்சேற்ற முடியாது ஏழைநான் தவித்தபோது அன்னை கொம்புடையாள் பெருமக்கள் சிலரை நினைவூட்டினாள். அவர்களை நாடினேன். பாத்திரம் அறிந்தல்ல, பாத்திரம் ஏந்திய எனது தகுதிக் கேற்ப பிச்சையிட்டார்கள் அவர்களை இங்கு நினைவு கொள்வது அவசியமாகும்.

திரு. அ. சொ. அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் காரைக்குடி. திரு. RM. K. P. வெங்கிடாசலம் செட்டியார் அவர்கள் காரைக்குடி. திருமதி. சக்தி கிருபாகரன் அவர்கள் சென்னை. திரு. மோகன்ராவ் அவர்கள் சென்னை. தரமணி சுகர்ஸ் அன் கெமிக்கல்ஸ் சென்னை. திரு P. கருப்பச்சாமி நாடார் அவர்கள் மதுரை. திரு. ஏ. எல். சுப்பையா அம்பலம் அவர்கள் காரைக்குடி. திரு பழ.படிக்காசு அவர்கள்பள்ளத்தூர்

திரு. எம். கே. முத்து அவர்கள் காரைக்குடி
திரு. சீ. இராமசாமி அம்பலம் அவர்கள் தளக்காவூர்
திரு. என். எஸ். நாச்சியப்பன் அவர்கள் மானகிரி
முருகனடிமை திரு. மு. கணேசன் அவர்கள் காரைக்குடி
திரு. A. M. ஜோதிமணி அவர்கள் காரைக்குடி
திரு. சுப. துரைராசு D.E.E. Ex.M.L.A., அவர்கள் காரைக்குடி
திரு KR. SP. கண்ணன் அவர்கள் காரைக்குடி
திரு பா. கர்ளிதாசு அவர்கள் காரைக்குடி
திரு கூத்தகுடி உமாதேவன் அவர்கள்
திரு அ. காமராசன் அவர்கள் காரைக்குடி

மற்றும் பெயர் குறிப்பிட வேண்டாம் என்று உதவிய பெருமக்கள் இருவர். ஆகியோருக்கும் என் இதயம் நிறைந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்கிறேன்.

இவற்றோடு, இந்நூலை சிறந்த உயர்ந்த முறையில் அச்கிட்டு உதவிய அருளாளர் அன்புச் சகோதரர் அண்ணா அச்சகஉரிமையாளர் மு, கணேசன் அவர்களுக்கும் முகப்பு ஓவியம் தீட்டித்தந்த திரு ராம்ஜி அவர்களுக்கும், அச்சகப்பணியாளர்கள் என் இனிய நண்பர்களுக்கும் என் நன்றியைக் காணிக்கையாச்குவதுடன் எல்லோர்க்கும் நல்லருள்பாலிக்க அன்னை கொப்புடைய நாயகியின் பனிமலர்ப்பாதம் வணங்கி இறைஞ்சுகிறேன்.

நன்றி வணக்கம்

அன்பன்

ஆ. குறள்பித்தன்

# தமிழ்த்தாய் வாழ்த்து



மாதேவன் சிவனாரே மன்றத்தில் வளர்த்திட்ட
மகத்துவம் தனைக்கொண்டது!

மண்ணகம் மீதிலே மற்றெங்கு மில்லையெனும்
மதுரத்தின் சுவைகொண்டது!

மாதேவி சக்தியாள் மணவாளன் தன்னோடு
மகிழ்வுறத் துணையானது!

மலைபோன்ற காப்பியம் மாண்புடைய இலக்கியம்
மலர்ந்திடப் பொருளானது!

சீதேவி முகம்போன்று செழிப்போ டிருக்குமது
செந்தமிழ் மொழியாகுமே!

சென்னியில் அதையேற்றிச் சிறப்பிக்கச் செய்வதிந்த
சிறுவனது பணியாகுமே!

அகத்தியன் காப்பியன் அரசாண்ட பாண்டியன்
அறமுரைத்த திருவள்ளுவன்!

அடிகள்இளங் கோகம்ப னோடுபல் லோர்களுனை
அணிசெய்த பெருமையாலே!

செகத்திலே இணையின்றிச் சிறிதளவுங் குறைவின்றிச்
சிறக்கின்றாய் இனிமையாலே!

சிந்தையள்ளும் பூங்காற்றே! சிரிக்கின்ற தேன்மலரே!
சந்தனத்தில் குளித்த மயிலே!

இகத்திலே என்னையும் மகனாகப் பெற்றுள்ள
எழிலோங்கும் தமிழத் தெய்வமே!

என்னாவி போம்வரை உனைவாழ்த்திப் பாடுவேன்
இதுஎந்தன் கடனாகுமே!

(2)

கல்லாக் மரமாகக் காட்சிதரும் மாந்தரையும்
கனியாக மாற்றுந் தமிழே!

காலமெலாம் வறுமையில் வாழ்வோரின் நெஞ்சிலே
களியாட்டம் போடுந் தமிழே!

சொல்லோடு பொருளோடு சிங்கார நடையோடு
சுவையோடு வந்த தமிழே!

சொக்கனது மடியிலே சுகங்காணும் மீனாட்சி
சொந்தநகர் வளர்ந்த தமிழே!

எல்லோர்க்கும் வேண்டிய ஏற்றநூல் யாவுமே
ஈன்றுள்ள தமிழன்னையே!

ஏற்றுவேன் துணிவோடு இருக்கும்வரை மகிழ்வோடு
என்தலை வணங்கும் உன்னையே!

(3)

கருவிலே நான்வளர்ந்த காலத்தில் என்னையும்
களிப்போடு கண்ட தமிழே!

கண்ணான தாய்மடிப் பிள்ளையாய்க் கிடக்கயில்
குடித்தபா லான தமிழே!

தெருவிலே விளையாடித் திரிகையில் தினந்தோறும்
துணையாக நின்ற தமிழே!

தீயவழி செல்லாமல் தூயவழி செல்லவே
தூண்டி வளர்த்த தமிழே!

குருவாக இருந்தென்னைக் கவிபாடக் கற்பித்த
கொஞ்சுதமிழ்த் தெய்வ வடிவே!

கோவிலாய் என்நெஞ்சில் குடிகொண்டு வாழ்கநீ
கும்பிட்டு வாழ்த்து வேனே!

(4)



# அருள்மிகு கோப்புடைய நாயகிப் பதிகம்

## விநாயகர் வணக்கம்

பார்மேவும் பிள்ளையார் பட்டிப் பெரியோனே!
தார்மேவுந் தொந்திக் கரியோனே!—சீர்மேவுங்
கொப்புடைய நாயகியின் குன்றாத மாண்புரைக்கத்
தப்பாமல் உன்னருளைத் தா!

## விருத்தம்

பூவாகி நல்ல மணமாகி யப்பூவின்
பயனுறு பொருளு மாகி!
பூதலத்தில் எல்லாரும் போற்றியே கும்பிடும்
படியாகி! மேன்மை யாகி!
சாவாத அறிவாகி! சரிநிகர் சமானமாகி!
சலியாத இன்ப மாகி!
செஞ்சுடர்க் கற்பூரச் சோதியாய் மனவிருள்
ஓட்டிடும் உண்மையாகி!
மாவேதமாகியே! மாமக ளாகியே
மண்ணகங் காக்கும் தாயே!
மனதார வாழ்த்தியுனை வாழ்தற்கு மேலேதோர்
மார்க்கந்தான் ஒன்று மிலையே!
தேவாரந் தினஞ்சூடி துதித்திடும் சான்றோர்கள்
திகழ்கின்ற செட்டி நாட்டின்
காரைமா நகர் வாழுங் கண்கண்ட தெய்வமே!
கொப்புடைத் தேவி உமையே! 1

புத்தியைச் செலுத்திநல் பக்தியைத் தேடிடும்

பாதையை மறந்திருந்தேன்!

பாவிநான் பலகாலும் பகுத்தறி வின்றியே

பாதகம் பேசி வந்தேன்!

மெத்தெனும் உன்பாதம் போற்றிப் பணிந்திட

மனதிலே நினையா மல்நான்

மனிதனெனும் உருவிலே மண்ணிலே வாழ்ந்தகதை

மலைதாழும் சொல்வ தென்றால்!

எத்திக்கும் பார்த்திடும் ஈசுவரி யலவோநீ!

எந்நிலை, உரைத்தல் வீணே!

ஏழைஎன் குறைகளைக் குற்றமாய்க் கொள்ளாது

ஏற்றுநீ காக்க வேண்டும்!

தித்திக்கும் முத்தமிழை! நித்தமும் வளர்த்திடும்

திருவோங்கு செட்டி நாட்டின்!

காரைமா நகர்வாழுங் கண்கண்ட தெய்வமே!

கொப்புடைத் தேவி உமையே! 2

கூடிக்கலை கின்றகூட்ட மொக்குங் காசுபணம்

குவிக்கின்ற நோக்க மில்லை!

கொட்டுகின்ற வறுமையில் குடும்பத்தை நடத்திடும்

கோலத்தில் மாற்ற மில்லை!

நாடிதான் நின்றிட்டால் நாறிடும் உடலெறுன்

நானுமே யறிந்த தாலே!

நடமாடுங் காலத்தில் நாயகி உன்னையே

நத்துதல் நல்ல தென்றே!

பாடினேன் பதிகமும் பாவிஎனைப் பாரம்மா

பற்றியே பிடித்தி டம்மா!

பாரெல்லாம் சுற்றியே பொருள்கொண்டு வந்துமே

பழந்தமிழ் காத்து நின்றே!

நாடியே உனைவந்து நாளுந் தொழுவதால்

நலமோங்குஞ் செட்டி நாட்டின்!

காரைமா நகர்வாழுங் கண்கண்ட தெய்வமே!

கொப்புடைத் தேவி உமையே! 3

பொன்னையும் பொருளையும் பெரிதாக எண்ணிநான்

புலம்பியே வாழ்ந்து விட்டேன்!

பூமியில் யாருக்கும் புண்ணிய மில்லாமல்

பொழுதினைப் போக்கி விட்டேன்!

முன்னாளில் பதினெட்டுப் பேரோடு பல்லோர்கள்

மொழிந்ததைப் படித்தும் விட்டேன்!

மேதினியில் என்போன்ற மூடனே இல்லையில்லை!

முற்றிலும் சொல்வ துண்மை!

அன்னையே உனையன்றி அவனியில் வேறொரு

ஆதாரம் தெரிய வில்லையே!

அடங்காத மூர்க்கனை ஆணவப் பேயனை

அடக்கிநீ! ஆள வேண்டும்!

கன்னியாய் இருக்கின்ற கற்கண்டாம் செந்தமிழைக்

காத்துவருஞ் செட்டி நாட்டின்!

காரைமா நகர்வாழுங் கண்கண்ட தெய்வமே!

கொப்புடைத் தேவி உமையே! 4

தையலர் மீதிலே மையலே கொண்டுதான்

தடம்மாறித் தத்த ளித்தேன்!

தேடியலைந் திட்டஎன் தேறாத உடலுக்குத்

தீனிதான் போட்டுக் கெட்டேன்!

பொய்யிலே ஊறிடும் புல்லரின் உறவிலே

புன்மையாய் வாழ்ந்து விட்டேன்!

பொல்லாத வன்என்ற பட்டத்தை ஊரிலே

பெற்றதே! கண்ட பலனே!

கைகளைக் கூப்பியே கண்களை மூடியே

கல்மன முருக நின்றே!

கதறிடும் நிலைபெற்ற கடயனை மன்னித்துக்

கருணைநீ காட்ட வேண்டும்!

மெய்யாகச் சொல்கிறேன் மேலான தமிழ்மொழி

மணங்கமிழ் செட்டி நாட்டின்!

காரைமா நகர்வாழுங் கண்கண்ட தெய்வமே!

கொப்புடைத் தேவி உமையே! 5

தந்தைதாய் செய்திட்ட தவத்தினால் நானிந்தத்

தரணியில் வந்து பிறந்தேன் !

தலைமண்ணில் மறையுமுன் தாயுன்னைப் பாடவே

தேகத்தைத் தாங்கி நின்றேன்!

சிந்தையில் நினதுபெயர்ப் புகழினைத் தேக்கியே

செந்தமிழ்ச் சிறிது கற்றேன் !

சிவனது தேவியுன் சீர்களில் சிலவற்றைச்

சிறியவன் செப்பு கின்றேன் !

எந்தநாள் தான்வந்து எனக்கருள் புரிவாயோ

எப்படித் தேற்று வாயோ !

இவ்வுடலை நாய்நரி தேடுமுன் வரவேண்டும்

இதுஎந்தன் ஆசை யம்மா !

பைந்தமிழைப் பரப்பிடும் பணியிலே பேர்பெற்ற

பாங்கான செட்டி நாட்டின் !

காரைமா நகர்வாழுங் கண்கண்ட தெய்வமே !

கொப்புடைத் தேவி உமையே ! 6

வையத்துள் நின்போல தெய்வந்தான் இல்லையென

வானதிரக் கூறு கின்றே ன்!

வாடாத பாமாலை! பூமாலை சூடியுன்

வடிவினைக் காணு கின்றேன்!

தூய்யநின் திருமேனித் தோற்றத்தைக் கண்டுமே

துள்ளியே ஆடுகின்றேன்!

திருத்தேரில் நீஏறித் திருவீதி வரும்போது

தேனாற்றில் நீந்து கின்றேன்!

பெய்கின்ற பெருமழையன் பேரருள் மழைஎன்று

போற்றியே வாழ்த்து கின்றேன்!

பெண்ணரசி! நல்லரசி! பெற்றெடுத்த பேரரசி!

பித்தன்மனம் நித்த மிருப்பாய்!

பொய்யா மொழிப்புலவன் கொய்யாக் கனிக்குறளைப்

பாராட்டுஞ் செட்டி நாட்டின்!

காரைமா நகர்வாழுங் கண்கண்ட தெய்வமே

கொப்புடைத் தேவி உமையே!

எக்காலும் அருள்சுரக்கும் தேவியுன் புகழ்பாடி

இம்மையில் மறுமை பெறவே!

எண்ணிடும் மாந்தர்கள் இதயத்துள் வைத்துனை

இருகரங் குவித்து வந்தால்!

தக்கபல பெருமைகள் தடையின்றிப் பெற்றுமே

தாழாத வாழ்வு காண்பார்!

தெரியாத மனிதர்தான் திக்கெலாம் சுற்றியும்

தெளிவின்றித் திரும்பி வருவார்!

மிக்கவே ஆடினும் வான்கோழி என்றுமே

மயிலான செய்தி இலையே!

மண்ணிலே பன்னூறு தெய்வங்கள் இருப்பினும்

மாதா உனக்கிணை இல்லையே!

சிக்கன முறையோடு சிறப்பாகத் தமிழ்-பேசும்

சீரோங்கு செட்டி நாட்டின்!

காரைமா நகர்வாழுங் கண்கண்ட தெய்வமே!

கொப்புடைத் தேவி உமையே! 8

ஆங்காரி! அன்ன பூரணி! நாரணி!

அம்பிகை! சுந்தரி! அந்தரி!

ஆனந்தி! ஆரணி! அபிராமி! கற்பகி!

அங்கயற் கண்ணி! மேலும்!

பாங்கான பார்வதி! பகவதி! பார்க்கவி!

பயிரவி! முத்து மாரி!

பார்போற்றுங் காளி! பகைவீழ்த்தும் வீரியெனப்

பல்வேறு பெயர்கள் சொலியே!

நீங்காத் துயர்கலைய நின்முகம் பார்க்கின்ற

நின்னடி யார்மு கத்தை!

நீ கொஞ்சம் பார்த்திட்டால் நிற்குமோ அவர்குறை

நாயகி! நோக்கி டம்மா!

தீங்கொன்றும் நினையாமல் தெள்ளுதமிழ் வளர்க்கின்ற

தென்பாண்டிச் செட்டிநாட்டின்!

காரைமா நகர்வாழுங் கண்கண்ட தெய்வமே!

கொப்புடைத் தேவி உமையே!

கொண்டலும் நாணிடும் கூந்தலில் எரிகின்ற

கோபக்கனல் கொண்ட காட்சியும்!

கெண்டையும் நாணிடும் கோல விழியுளக்

கொள்ளை யழகுப் பொன் முகமும்!

தண்டனை தந்திடச் சூலமுடன் நாட்டின்

தரித்திரம் நீக்கிடும் பாத்திரம்!

தாயன்புப் பாசக் கயிறுமே தாங்கிய

தளிர்க் கொடி யொத்த கைகளும்!

பெண்ணுக்குப் பேரெழில் கூட்டிடும் கொப்பணி

பூட்டியே காட்டிடும் செவிகளும்!

பார்த்திடக் கண்ணொளி! பரவிட நல்மனம்

பாலிக்க வேண்டு மம்மா!

கண்ணான தமிழ்க்கவி கம்பனைக் கொண்டாடியே!

களிப்புறுஞ் செட்டி நாட்டின்!

காரைமா நகர் வாழுங் கண்கண்ட தெய்வமே!

கொப்புடைத் தேவி உமையே! 10



# அருள்மிகு கோப்புடையநாயகி அம்மன்
# அந்தாதி

---

## விநாயகர் வணக்கம்

அற்புதப் பாப்புனை ஆற்றல்
அளித்திடும் அன்னையாமெம்
கற்புடை நாயகி கொப்பை
உடையாளை நெஞ்சிலேற்றி
நற்பத அந்தாதி நான்பாட
நானில முன்னவனாம்
கற்பக மூர்த்தி! கணபதி
பொற்பாதம் போற்றினனே!

## நூல்

போற்றுவார் எல்லாம் புகழ்பெற
வேண்டி நகர்நடுவில்
வீற்றுள வித்தகி! வேதகி!
கொப்புடை நாயகியாள்
ஏற்றம் தருவாள்! எழில்முகங்
காட்டுவாள் எந்தநாளும்
ஊற்றாய் இருப்பாள் உவந்தே
அளிப்பாள் நிதிகளுமே! 1

நிதியும்! நலமும்! நிறைவும்
மகிழ்வும் நிலைத்திடவே!
மதியும்! மனமும்! பணியும்
துணிவும் மலர்ந்திடவே!
புதிய எழிலே! திகழ்ந்திடும்
பூங்கொடி பொன்னழகி!
விதியுங் கதியும் உயர்ந்திடச்
செய்யுநல் வித்தகியே! 2

வித்தகி! அன்பு மழைபொழி
ஞான விழிமலர்ந்த
புத்தகி! பூமகள்! பாவாணர்
போற்றிடும் பைந்தமிழே!
சத்தி! விமலி! முருகனைப்
பெற்ற சருக்கரையே!
சித்தகி! வில்லகி! சிந்தை
கவர்ந்திடும் வெண்ணிலவே! 3

நிலவே! நிலவின் ஒளியே!
நினையே துதிப்பவர்தம்
தலையே! விழியே! உணர்வே!
திருவே!கா ரைக்குடியின்
தலமே! வியத்திருத் தாயே!
புலித்தோல் தரித்தவரின்
பலமோங் கிடப்பா தியைப்பெற்ற
பாவையே! பொன்மலரே! 4

மலரே! மணமே! மணத்தின்
சுகமே! சுகத்திலுறும்!
பலனே! பலரும் பணிந்தே!
வணங்கும் மலைமகளே!
நலமே விடுநகர்! காரைக்
குடிவாழ் நனிமகளே!
குலமே விடுமே! உனைத்தினங்
கும்பிட்டு வந்திடவே! 5

வந்திடுஞ் செல்வங்கள் யாவும்
வளர்மதி உன்னருளே!
முந்திய பல்வினை முற்றுமே
தீருமே! மேன்களே!
எந்த நிலையிலும் என்மனம்
உன்னிடம் நின்றிடுமே!
கந்தனின் தாயே! கனியே!
அரும்பெருங் கற்பகமே! 6

கற்பக மே!கண்ணே! கண்ஒளி
யே!நல் கவின்மணியுன்
பொற்பதம் வேண்டிப் பரவுவார்
எல்லார்க்கும் நின்முகமே!
அற்புத மாகும் அழகுள
அன்னமே! ஆரணங்கே!
நற்பதம் நல்குவாய்! நங்கையே
கொப்புடை நாயகியே! 7

நாயகி நல்லருள் நல்கிடும்
தேவி! இனியமனத்
தாய்நீ! நலங்களைத் தந்திடும்
சக்திநீ! எந்தநாளும்
நோயணு காமல் நினதடி
யாரெலாம் இன்புறவே!
தூயமெய் யோடு திகழச்செய்
தூமணிச் சோதியளே! 8

சோதி மணியே! சுடரே!என்
செந்தமிழ்ச் சொல்லமுதே!
ஆதி மகளே! அறிவே!
அழகே! அரும்பொருளே!
நீதி வழங்கும் நெறியாளே!
நேர்மைத் திருவடிவே!
ஓதி உனைத்தொழும் அன்பருக்
கெல்லாம் ஒளிமயமே! 9

ஒளிமய மாகிய உன்னைத்தொ
    ழும்அன்பர் எந்தநாளும்
களிப்புடன் வாழ்வதைக் காணலாம்
    இந்த நிலத்தினிலே!
குளிர்முகங் காட்டிடும் கோதையே
    கொப்புடை நாயகியே!
தெளிவாய்த் தெரிகின்றேன் தாயே!
    தனிச்சுவைத் தேன்மணமே! 10

—

தேன்மணப் பூவே! தினமணித்
    தெய்வமே! தீந்தமிழே!
கூன்மனம் மாற்றிக் குறைதீர்க்கும்
    வள்ளுவ ஓவியமே!
வான்உறை மேலோர் வழுத்திட
    வாழ்ந்திடுங் காவியமே!
நான்மறைத் தேவியே! நைந்தோர்
    தமக்குநீ நற்றுதியே! 11




துதித்துத் துதித்தே! தொடர்ந்துமே
காண்பார்க்குன் நல்லொளியைப்
பதித்துப் பதித்தே! பரிவாகப்
பார்த்திடும் பார்வதியே!
குதித்துக் குதித்தேதான் கூத்தாடு
கின்ற சிவபெருமான்
மதிக்கும் மதியே! மயிலே!
மனங்கவர் அஞ்சுகமே! 12

சுகமே தருவாய்! தனந்தரு
வாய்நற் பலந்தருவாய்!
அகந்தரு வாய்நீ! மனமகிழ்
வாய்!அம்மா! இந்தநாளில்
யுகமே கழிக்க இருவினை
போக்கிட நின்னருளை
மிகவே தருவாய்! மலர்க்கொடி!
நின்னடி மேன்மையதே! 13

மேன்மை யடைய நினைப்பார்
　　தமக்கெல்லாம் மாண்புடனே !
தோன்றித் துயரைத் துடைப்பாள்
　　தினமே பகவதியே !
நான்எனும் எண்ணம் அழித்தவர்
　　நன்னிலை பெற்றிடவே !
வானின்று வந்து வழிகாட்டி
　　வாழ்விலே ஒன்றினையே ! 14

ஒன்றினை உன்னல் உலகோர்
　　அனைவர் ஒருமனதாய் !
நின்றிட வேண்டி நிலமீதில்
　　எண்ணுதல் எப்பொழுதும்
நன்றெனக் கொண்டு நடப்பேன்
　　நயமிகு நாயகியே !
என்றும் அடியேன் உனக்கே
　　எடுப்பேன் இயற்பணியே ! 15

இயற்பணி செய்தே இயங்கி
நிறைவுறும் என்னுடைய
மயக்கம் தவிர்த்து மனமாயை
மாற்றிநீ காத்திடுவாய்!
கயற்கண்ணே! கட்டிக் கரும்பே!
கனிமனத் தேவியளே!
முயற்சிக்கும் காரியம் முற்றுப்
பெறச்செய்வாய் நேரிழையே! 16

நேரிழை என்னை நோக்கி
நிதம்வாழ்த்தும் நாயகியே!
சீரிழை யே!தமிழ்ச் செல்வமே!
சிந்தனைத் தேன்குடமே!
பேரிழை யே!உயர் பேரும்
புகழும் உடையவளே!
ஆரழைத் தாலும் அவர்மனஞ்
சேர்வாய்! அருந்துணையே! 17

அருந்துணை யாகி அவனியை
ஆள்கின்ற அன்னையேநீ !
தருந்துணை யாலே தரணியில்
தங்கிப் பணிபுரியும் !
பெருந்துணை பெற்றேன் பெருநகர்
காரைக் குடியிலேதான்!
இருந்துனை யே !எண்ணி ஏற்றிப்
புகழ்வேன் சிறப்புடனே ! 18

சிறப்புள கல்வியும் சீர்களுந்
தந்திடுஞ் சங்கரியே !
மறந்துங் குறையே புரியா
மனந்தா புவியினிலே !
பிறப்பின் பயனைப் பெறத்துணை
செய்கநீ ! பார்வதியே !
இறப்பிலும் உன்னடி யேவர
வேண்டுமென் அன்னையளே! 19

அன்னையெம் ஈஸ்வரி எல்லோர்க்கும்
எல்லாமே ஆற்றிடுவாள் !
பொன்னம்மை ! இந்தப் புவிதனைக்
காத்திடும் பண்ணவனின்
நன்னம்மை ! என்றென்றும் ஏற்றம்
தருமம்மை ! நற்றமிழாள் !
அன்ன நடையம்மை அண்டம்
முழுமைக்கும் ! அன்பவளே ! 20

அவளே ! அபிராமி ! அம்பலத்
தாடுவான் ! நாயகியாம் !
அவளே ! சகலமும் ஆளும்
திறமை அமைந்தவளாம் !
அவளே ! இறைவன் இடப்பக்கம்
என்றும் இருப்பவளாம் !
குவளை மலர்விழிக் கொப்பாளே !
தான்என் றறிமனமே ! 21

மனமேநீ! கொப்புடை மாதாவை
எண்ணி மகிழ்ந்திடுவாய்!
தினமே அவளது பொற்கோயில்
தேடிநீ சென்றிடுவாய்!
சனமே விடு!மவள் சன்னதி
நின்றே வணங்கிடுவாய்!
தனமே! வருமே! பிறவுமே
தன்னாலே தான்வருமே! 22

வருகின்ற செல்வங்கள் வித்தகி!
உன்னால்தான் வந்ததென்றே
பெருமனங் கொள்வதே பேரின்ப
மாகும் புரிந்துவிட்டேன்!
ஒருகுறை நேராது! உண்மைதான்
மாறா தெனவுணர்ந்தே
திருமுறைக் கொப்புடைத் தாயுன்பொற்
பாதம் அடைந்தனனே! 23

அடைந்த எனைத்தாங்கி அன்பூட்டி
ஆன்றோர்பால் எந்தநாளும்
தொடர்ந்துமே தொண்டாற்றத் தூண்டுவாய்
என்னையே தூயவளே.
நடந்தது போகட்டும் நாட்டில்தான்
நாயகி! நாரணியே!
திடந்தந்து காப்பாய்நீ தேவியே!
தென்னன் விருப்பினளே! 24

விருப்புடன் உன்னையே வேண்டுந்
திருத்தொண்டர் வாழ்வுபெற
அருட்புனல் அன்பாய்த் தெளித்திடும்
அன்னையே ஆருயிரே!
கரும்பே! அறுமுகன் அன்னையே
ஆதிக் கருப்பொருளே!
பெருமைகள் ஈவாய்! மகிழ்வாய்
புவியிற் புதுமையளே! 25

புதுமை புரிந்திடும் பொன்னவன்
கைப்பிடிப் பூமயிலே!
இதமே தருஞ்சிவன் இன்புற
வந்த இனியவளே!
அதஞ்செய் கொடிய அசுரனைக்
கொன்ற அனலுருவே!
நிதமுன் திருப்புகழ் நான்பா
டியேதான் வழுத்துவனே! 26

வழுத்தும் அடியார்தம் வாழ்வினை
உயர்த்திடும் வான்மகளே!
செழித்த புகழும் சிவனேக்கும்
சேர்த்திடுஞ் செம்பொருளே!
பழுத்த அறிஞர் பரவிடும்
பாவையே! பால்நிலவே!
எழுத்தும் படிப்பும் எனக்கென்றும்
குன்றாது தந்தருளே! 27

தந்தருள் தண்டமிழ் கற்றே
தனிச்சுவை மிக்கவேநான்
சந்தப்பா! வஞ்சி! விருத்தப்பா!
சாற்றுக் கவிகளுமே!
எந்தப்பா யாத்தாலும் எக்குற்ற
வாரா திருந்திடவே!
அந்த வரந்தா! அழகே
அமுதே! அகவொளியே! 28

அகவொளி! காட்டி அருளே!
அணிமயி லாணிமுத்தே!
சுகவொளிச் சிந்தனை தோற்றுவி!
சுந்தர மாதரசே!
பகலிர வெப்போதும் பத்தினித்
தாயுன் மலரடியைச்
செகத்தில் மறவேனே சாமுண்டீ!
ஈஸ்வரித் தாய்க்குலமே! 29

குலம்சிறக் கும்நல்எண் ணங்கள்
பிறக்கும் அறிவுடையார்
பலம்கிடைக் கும்பல்லோர் போற்றும்
புகழ்கிடைக் குந்தினமே!
நலம்கிடைக் கும்மே! நினைத்திடத்
தோன்றிடும் தேவியைத்தான்
வலம்வந்து சொன்னல் வளந்தரும்
அம்பாள்தாள் மந்திரமே! 30

மந்திரச் சக்கரச் சக்தி
மிகுந்துள்ள மங்கலமே!
இந்திரன் தேவாதி தேவர்கள்
போற்றிடும் ஈஸ்வரியே!
வந்தனை செய்துனை வாழ்த்திநான்
பாடி மனங்குளிர்வேன்!
எந்தை சிவனாருக் கேற்ற
துணைவியே! நீள்தருவே! 31

தருவெனும் மாண்புடைத் தாயே!
　　உன திரு தாள்பணிந்தேன்!
இருகரங் கூப்பியே என்னை
　　மறந்தே உனை நினைந்தேன்!
ஒருவரந் தந்திடு உத்தமி
　　நீஇந்தப் பூமியிலே!
திருவெலாம் மாந்தர் அடைந்து
　　திகழ்ந்திட நற்கனியே! 32

கனியின் சுளையே! கரும்பின்
　　சுவையே! கனதனமே!
நனிபசும் பாலே! நகைமுக
　　மாதே மணிச்சரமே!
பனிமலர்த் தேனே! பரமனின்
　　மானே! பசுங்கிளியே!
இனியொரு பொல்லா இடர்எனைத்
　　தீண்டாமல் ஏற்றருளே! 33

ஏற்றிவைத் தென்னையே எண்திசை
நல்லார் அனைவருமே!
போற்றிடும் பேற்றினைப் பெற்றிடச்
செய்வாய் மணிமொழியே!
மாற்றுரு வேற்று மகிமைசெய்
மாதேவன் இல்லவளே!
தேற்றெனை! உன்தா மரைத்தாள்
சுமப்பேன் தலைமிசையே! 34

தலைமீது காலூன்றித் தாண்டவ
மாடும் தனித்தலைவன்!
கலையின் முதல்வன்! முயலகன்
கர்வத்தைப் போக்கிவிட்ட
மலையின் அரசன்! மதிசூடும்
மன்னன் மனைவியளே!
நிலைபெறுஞ் செல்வம் அனைத்துமே
தந்திடு நீதியதே! 35

நீதித் தலைவிநீ! நேர்மைக்கும்
நீயே! தலைவியம்மா!
ஆதித் தலைவிநீ! அப்பன்
மனங்கவர் ஜோதியம்மா!
மேதி னிபுகழ்சேர் மாண்புள
காரைக் குடிநகரின்
வீதித் தலைவி! வினைதீர்க்கும்
கொப்புடைத் தேவியளே! 36

தேவிநின் சீர்புகழ் தான்பேசு
கின்றேன் மகிழ்வுடனே!
ஆவி பிரியும் வரைக்கும்மே
அம்மா அதுநிலைக்கும்!
காவியம் பாடுங் கவித்திறன்
கற்பனை ஊற்றினைத்தா!
கூவி முறையிட்டே கேட்கின்றேன்
கோனாத சிந்தையளே! 37

சிந்தை கவர்ந்த செழிப்புறு
　　காரைக் குடிநகரில்!
வந்தே இருக்கின்ற வெண்காடர்
　　வாழ்க்கைத் துணைநலமே!
கந்தன் எனுஞ்சுவைக் கற்கண்டைத்
　　தந்திட்ட கோகிலமே!
எந்தன் மனத்துள் இருப்பாய்
　　இனித்திடும் மோகனமே! 38

மோகன ராகச் சுவைநிறை
　　மங்கையே! மாமலரே!
வாகனஞ் சிங்கம் தனிலேறி
　　வந்திடும் வான்மகளே!
மேகமாய் நல்லருள் நல்கிடும்
　　மேன்மைக் குணக்கடலே!
நாகம் அணிந்துள்ள நாதர்
　　விரும்புந்தென் னாட்டினளே! 39

நாட்டினில் நன்மழை நின்று
பொழிந்திடச் செய்திடுவாய்!
வீட்டினில் நல்லொளி நித்தம்
நிலவிட வந்திடுவாய்!
ஏட்டினில் நின்புகழ் என்றும்
எழுதிடப் பண்ணிடுவாய்!
பாட்டினில் நற்பொருள் பெற்று
விளங்கிடும் பொன்மயிலே! 40

மயிலே! மகமாயி! மண்ணகங்
காத்திடும் மாரியளே!
குயிலே! முகிலேநற் கொன்றை
யணிவானைக் கொண்டவளே!
உயிரே! உலகாளும் "ஓங்காரி!
என்னும் உமையவளே!
துயிலின்றித் தொண்டு புரிதாயே!
என்றும்நீ தீந்தமிழே! 41

தமிழே! உயிரே! தனிச்சுவைச்
 சொல்லே! திருக்குறளே!
அமிழ்தே! அறிவே! அறவோர்கள்
 தந்திட்ட பல்கலையே!
கமழும் மலரே! கருவிழிக்
 கோதையே! கற்பகமே!
அமரர் வணங்கும் அகிலாண்ட
 அம்மையே! நன்மருந்தே! 42

மருந்தாய்! இருந்தே! மனப்பிணி
 தீர்த்திடும் மாமகளே!
பெருந்தவ மேற்றுப் பணிபவர்க்
 கெல்லாம் உதவிவரம்
தருந்தாயே! தங்கமே! திங்கட்
 சடையானின் தேவியளே!
அருந்தாயே! அன்னமே! காரைக்
 குடிநகர் ஆள்பவளே! 43

ஆள்பவ ளேஅட்ச யப்பாண்
டமேபெற்ற அன்னையளே !
நீள்பவ ளேஅப யக்கையும்
நல்லபா சக்கயிறும்
தாள்பணி வோர்க்கு வரும்பகை
தீய்க்க ஒருகரத்தில்
தூள்செயும் சூலம் உடையாளே !
தாயே ! மணிஒலியே! 44

ஒலியே ! ஒலிமணி ஓங்கிடும்
ஓங்கார ஓம்வடிவே !
சலியேவா ராமல் தடுத்திடு !
தீய்த்திடு ! சங்கரியே !
நலிவினை நீக்கி நலமேதா
கொப்புடை நாயகியே !
பொலிவாய்த் தினமும் திகழ்ந்திடும்
பூவையே ! பொன்விளக்கே ! 45

பொன்விளக் கேபுது மாவிளக்
கேநல்ல வானகத்தின்
மின்விளக் கேஎன்றும் மங்காப்
புகழ்சேர் திருவிளக்கே!
இன்விளக் கேநன் விளக்கே!
இறைவன் மனைவிளக்கே!
முன்விளக் கேகொப் புடையம்மன்
என்பாள் முகவிளக்கே! 46

விளக்கின் ஒளிநீ! விரும்பும்
பொருள்நீ! விதவிதமாய்!
அளக்கும் பொருள்நீ! அளவற்ற
ஆசைப் பொருளுமேநீ!
களிக்கும் பொருள்நீ! கவலையைப்
போக்க மனமுவந்தே
விளிக்கும் பொருள்நீ! வழங்கும்
பொருள்நீயே! விண்ணவளே! 47

விண்ணவ ளேஇவ் வுலகம்
வணங்கிடும் முன்னவளே!
பண்ணவ ளேபெரும் பாவலர்
போற்றிடும் மன்னவளே!
கண்ணவ ளேதிரி காலமும்
காத்திடும் பொன்னவளே!
எண்ணவ ளேமுன் பிறந்த
தமிழ்த்தாய் எழுத்தவளே! 48

எழுத்தில் எழுத இயலாப்
பெரிய புகழ்வடிவே!
கழுத்தில் அரவம் அணிந்த
கடவுளின் காதலியே!
வழுத்தும் அடியார் விரும்பும்
வரமே! வழங்குவளே
பழுத்த சிவனுர் பரிவாய்
அணைக்கும் செழுமையளே! 49

செழுமை! இளமை! சிறந்து
விளங்கிட வேபெருமை!
முழுமையாய்த் தந்திடும் மங்கள
நாயகி கொப்புடையாள்!
அழைத்தால் வருவாள்! அணைத்தே
மகிழ்வாள்! அடியவர்கள்
உழைப்பை மதிப்பாள்! உயர்வாய்த்
தமிழ்ப்பா இசைப்பவளே! 50

இசைப்பவள்! எல்லோர்க்கும் எல்லாம்
தருபவள் இவ்வுலகை
அசைப்பவள்! என்றென்றும் ஆண்டவ
னேடுதான் ஆடுபவள்!
பசையவள்! பாசம் உடையவள்!
பத்தினி யானவளே!
திசைஎட்டும் தீமையைத் தீய்த்திடும்
காளிஎன் பார்இவளே! 51

பாரெல்லாம் தாங்குவாள் பார்க்கும்திக்
கெல்லாம் பரவிடுவாள்!
சீரெல்லாம் பெற்றுத் திகழ்வாள்!
சிறப்பான தேர்தனிலே!
ஊரெல்லாம் சுற்றி வருவாள்!
உலகத்து நாயகியாள்!
ஈரே ழுலகும் இயக்குவாள்
கொப்புடை உத்தமியே! 52

உத்தமி ஓங்கார நாயகி
ஒன்பது கோள்வணங்கும்!
முத்தமிழ் செல்வமூ காம்பிகைப்
பேரும் உடையவளே!
புத்தியும் சித்தியும் பெற்றுய்யச்
செய்திடும் பொற்கொடியாள்!
சித்திரை யிற்பெருஞ் சீர்விழாக்
காணும் முதன்மையளே! 53

முதற்சக்தி என்றே மொழிந்திடப்
    பூமியில் வந்தவளே!
எதற்கும் உறுதுணை யாகும்
    இமயவன் நற்றுணையே!
பதமாய் உனையே பணியும்
    எனக்குன் திருவடிதான்
இதமே யளித்தே இடரை
    யழித்திடும் சௌந்தரியே! 54

தரியேன் மனதிலே தீமைகள்!
    என்றென்றும் உன்னடியைப்
பிரியேன் கணமும்! உனைநான்
    புவியிற் புகழ்ந்திடுவேன்!
திரியேன் அலைந்தேதான் தேடேன்
    பிழைகள்! பிறவிடத்தில்
தெரியேன் உனையன்றித் தெய்வந்தான்
    நாட்டிலே பூரணியே! 55

பூரணி! அம்மனி! பூவையர்
தம்குலப் பேரணியே!
தாரணி! போற்றும் தனிப்பெருந்
தெய்வத் திருமணியே!
காரணி! கொப்புடை நாயகி
தற்பரத் தண்ணொளியே!
ஊரணி! காண உயர்கோ
புரக்கோவில் சேர்ந்தவளே! 56

சேர்ந்து இருப்பேன் சிறந்தவுன்
தொண்டர் பலருடனே!
சார்ந்துனைப் போற்றியே செப்புவேன்
பாடிப் புகழ்ந்திடுவேன்!
கார்குழல் பெற்றுள் கற்பக
வல்லியே கண்மணியே!
வார்கழல் வள்ளல் வளர்மதி
சூடியின் மாலையளே! 57

மாலை அணிந்த மலைமகள் !
இன்புறத் தீந்தமிழ்ப்பா
மாலை புனைவேன்! அணிந்துமே
பார்த்து மகிழ்ந்திடுவேன்!
காலையும் மாலையும் கும்பிட்டே
காண்பேன் வலம்வருவேன்!
சோலை தரும்சுகத் தென்றலே!
செம்மைசேர் வேள்வியளே ! 58

வேள்வி இயற்றலும் வேண்டித்
தொழுவதும் மெத்தவுமே !
கேள்வி தொடுப்பார் தமக்குக்
குணமாய் விடைதரவே !
தாள்பணிந் தேதாயே! தாவென்று
நானுனைக் கேட்பதெல்லாம்
நீள்பெருஞ் சிந்தனை நல்குவாய்
ஆற்ற நிகழ்ச்சிகளே ! 59

நிகழ்வ தனைத்தும் நினதருஞ்
செய்கைதான் நித்தமுமே!
மகிழ்வ தனைத்தும் மலர்வ
தனைத்தும் திருவருளே!
புகழ்வ தனைத்தும் புவியிற்
புலவோர் திருமனத்தில்
திகழ்வ தனைத்தும் நினது
பெயரே திருமணியே! 60

திருமணி! தூமணி! தேவாரத்
தேன்மணி! பன்மணியே!
அருமணி! சிந்தா மணிநீ!
அருங்கலை மாமணியே!
கருமணி! செல்வ மணிநீ!
காணும் நவமணியே!
பெருமணி! கண்மணி! அன்பேநீ!
பண்புள்ள பெண்மணியே! 61

பெண்மணி! யேநன் மணியே!
பெரிய குருமணியே!
விண்மணி யேபொன் மணியே!
வடிவேலன் தாய்மணியே!
தண்மணி யேவான் புகழும்
சிவனார் மனமணியே!
மண்மணி யேஎனைப் பாரில்
உயர்த்தும் மடந்தையளே! 62

மடந்தை உனையே மகிழ்ந்திடச்
செய்கின்ற மன்றமாடி
உடந்தை யளேபெரும் ஓங்காரி
என்னும் உமையவளே!
படர்ந்த உலகிற் படுந்துயர்
போக்கிப் பரமனடி
நடந்திடத் தந்திடு நல்லருள்
இப்போதே நாரியளே! 63

நாரிய ரைத்தெய்வ நங்கைய
ராகநான் எண்ணிடவே!
சீரிய பாதையில் நானும்
செலவேச் சிறப்புடனே!
கூரிய நல்லறி வூட்டிடு
கொப்புடை நாயகியே!
வேரிற் பழுத்த பலாத்தமி
ழாலுனை வாழ்த்துவனே! 64

வாழ்த்துவேன் என்றும் வடிவழ
கேஎன்றன் வாய்மணக்க
தாழ்த்துவேன் என்தலை தாயே
உனது திருவடிக்கே!
வீழ்த்தவே வேண்டுவேன் என்பகை
காளி! உனதருளே
சூழ்ந்தெனைக் காக்கச் சுடர்முகங்
காட்டிநீ! தோன்றுகவே! 65

தோன்றுக எங்குமுன் தூயநல்
ஆட்சிச் சிறப்புணர!
ஊன்றுக! உன்னருள் ஓங்கும்
வளங்கள் வழிந்தொழுக!
சான்றவர் வாழ்த்தச் சிறந்தநல்
ஆன்றவர் போற்றிடவே!
ஈன்றவ ளேவாழ்க! என்றும்
இளமைசூழ் நங்கையளே! 66

நங்கை இளமாது! நானிலத்
தார்கள் நயந்துவக்கும்
மங்கை மலர்முகத் தாள்மா
யவனின் மனங்கவர்ந்த
தங்கை தளிர்கொடித் தங்க
நிறங்கொள் அழகினளே!
கங்கை அணிவான் மணந்த
கனிக்குலை இன்னமுதே! 67

அமுதூட்டித் தாலாட்டும் அன்னை
எனும்பேர் அடைந்தவளே!
கமழும்பூச் சூடுங்கா ரைக்குடிக்
கொப்புடை நாயகியே!
உமையெனும் அன்புள்ள மாதாவே!
மாறாத இன்ப வாழ்வே
அமைந்திட என்றுமே நன்றாய்
வரங்கள் அளிப்பவளே! 68

அளிப்பாய்! அடியார் விரும்பும்
வரமே அளித்துடனே!
களிப்பாய்! அதுகண்டு! கற்றவர்
போற்றுங் கலித்தொகையே!
விளிப்பாய்நீ வேண்டும் படியெல்லாம்
மாண்பை விளைத்திடுவாய்!
குளிப்பாய்! மகிழ்வில்! குறைவிலா
நின்புகழ் செப்புவனே! 69

செப்புவேன் நின்புகழ் செந்தமிழ்ச்
செல்வியே ! நாதனது
ஒப்பில்லாத் தேகத்தே ஒட்டி
உறவாடும் பைங்கிளியே !
எப்போதும் இன்முகங் காட்டியே
நிற்கும் இனியவளே !
இப்புவி கண்டநல் ஈடில்லாச்
சோதிச் சுடர்ப்பொருளே ! 70

பொருள்தரு வாய்நற் புகழ்தரு
வாய்பல் வளந்தருவாய் !
அருள்தரு வாய்நீ ! அழகனின்
பேரன்புத் தங்கையளே !
மருள்நீக் கிடுவாய் ! மதிப்பூட்
டிடுவாய் ! மனதிலுள்ள
இருள்நீக் கிடுவாய் ! இடர்போக்
கிடுவாய் !என் அன்பகமே ! 71

அகமே குடிகொண்ட ஆனந்தம்
பொங்கும் அருட்சுடரே!
இகமே பரம்பெற இன்னருள்
தந்திடும் அன்னையளே!
சுகமே! பெறத்திரு மந்திரம்
சொல்லிடுஞ் சுந்தரியே!
மிகவே கனிவாய் திறந்தே
தருவாய் மணிமொழியே! 72

மொழிக்கு முதலே! முடிவே!
அனைத்திற்கும் மூத்தவளே!
விழிக்கு மொளியே! விளைந்தநன்
முத்தே! வியனுலக
வழிக்குத் துணையே! வினைதீர்க்கும்
தாயே! வஞ்சமனம்
அழிக்கும் உருவாய்! அழியாத்
திருவாக ஆனவளே! 73

ஆன கலைகள் அறுபத்து
நான்காயும் ஆனவளே !
வான வனையேநீ வாழ்க்கைத்
துணையேற்க வையகத்தில்
மோனத் தவஞ்செய் தவளே !என்
மாதாவே முக்கணனூர்
ஞானத்திற் கேற்ப அமைந்திட்ட
ஞானம்சூழ் மோகினியே ! 74

மோகி னியாளே ! மணிமே
கலையே ! மனோன்மணியே !
வாகி னியாளே ! நிலவே !
வளர்தமிழ்ப் பெட்டகமே !
ஆகம வித்தே அருள்வடி
வேஆன்ருேன் பொன்னுடம்பில்
பாகமே பெற்ற பசும்பொன்னே !
பண்புள்ள பாங்கினளே ! 75

பாங்குள மங்கையே பாகம்
    பிரியாளே! பாரினிலே!
ஓங்கும் பெருமை உடைத்திரு
    ஒட்டாற் குரியவளே!
தாங்கும் மனமுடைத் தாயே!
    தவத்திரு நாயகியே!
தேங்கும் பணியின் தடைகளைப்
    போக்குவாய்! தூயவளே! 76

தூயவ ளே!நீ தவநிறை
    பார்வதி! வேலவனின்
தாய வளே!நீ திருமகள்
    போற்றும் மலைமகள்நீ!
தேய வளே!நீ நிதமுனைக்
    காண்பார்க்கு வான்பொருள்நீ!
தேயம் சிறக்க வழிகாட்
    டியேநிற்கும் ஆசையளே! 77

ஆசை முழுவதும் என்அம்மா !
நான்உனைப் பற்றுவதே !
பூசை முழுவதும் தாயே !
உனக்காக்கிப் பூமியிலே !
தாசனுய் நானிருந் தேதொண்டு
செய்ய விருப்புடனே !
பாசமாய் உன்திருப் பாதம்
பணிந்தேன் மடமயிலே ! 78

மடமயி லே!நன் மனத்துள்
மகிழ்ந்தாடும் பூமயிலே !
நடமயி லே !வண்ண மாமயி
லே !நீல வான்மயிலே !
திடமயி லே !தில்லைக் கூத்தன்
மயிலே ! அவர்மகனுர்
இடமயி லே !என் இதய
மயிலே ! எனதுறவே ! 79

உறவும் துணையும் உதவியும்
நீதான் உலகினிலே!
திறமும் அறிவும் தெளிவுகள்
உன்னால் வருவதுவே!
அறமும் புரிய குணமே
பெறுவதும் உன்செயலே!
துறவும் துணிவும் துளிர்த்திடச்
செய்திடும் சேவையளே! 80

சேவைகள் செய்து சிறப்புற
வேண்டிடும் நான்தினமும்
நாவை யடக்கும் நிலையை
அளித்திடு நாயகியே!
தேவை குறைத்திடு! தன்னலம்
மாய்த்திடு!தாயகியே!
பூவைத் தினந்தினம் புன்னகை
யோடனி பொற்கொடியே! 81

பொற்கொ டியேஉன் பெருமை
தனைநான் தினமெழுதி
நற்கொடி நாட்டிட எண்ணியே
நாளும் உனைநினைந்தேன் !
சொற்கொடு! பாட்டிற் பொருள்கொடு!
சிந்தை குளிர்ந்திடவே !
கற்பவர் தம்மையும் காத்து
நிலமிசை ஆண்டருளே ! 82

ஆண்டுகொண் டென்னைப் புவியிற்றான்
காக்கும் அருமையளே !
வேண்டும் படியெலாம் வித்தைகள்
தந்தாள் மலைமகளே !
மாண்டு விடாத மகிழ்வைத்
தருமுகங் கொண்டவளே !
பூண்டு முதற்பல் லுயிர்போற்றும்
பண்பு மிகுந்தவளே ! 83

மிகுந்திடும் ஊக்கமும் மேலான
ஆற்றலுந் தந்திடுவாய்!
தகுந்தவர் போற்றிடும் தண்டமிழ்ச்
செல்வியே! தாயவளே!
புகும்வீடு பூரிக்கும் உன்னால்
புவியில் பெருமகளே!
உகந்தெனை ஏற்பாய்! உயர்வைத்
தருவாய்! உலகினிலே! 84

உலகம் பதினான்கும் உன்னாட்சி
எந்நாளும் ஓங்கிடுமே!
திலகம்செங் குங்குமம் நெற்றியி
லிட்டுத் திகழ்பவளே!
மலமூன் றினையு மழித்தே
எனையிந்த மாநிலத்தே!
பலமுடன் நற்பணி யாற்ற
வகுப்பாய்நற் பாதையளே! 85

பாதையைக் காட்டிப் பரவீ
டளிக்கும் பயிரவியே!
போதை தருவ தனைத்தும்
பசும்பொன்னுன் பேரழகே!
கோதையே! என்னுயிர்த் தெய்வமே!
கொப்புடை நாயகியே!
மேதையர் போற்றிடும் மாதாவே
மாபெரும் வெற்றியளே! 86

வெற்றியே காண்பார்! வளங்காண்பார்!
வல்லார் பருடைய
பெற்றியே! காண்பார்! நலங்காண்பார்!
பண்பாக மேலவரைப்
பற்றியே! நிற்பார்! பதவி
பெறுவார்! பழந்தமிழே!
சுற்றியே வந்துனைச் சேவிப்பார்
காரைக் குடியவளே! 87

குடிஉய ரும்கோன் உயரும்!
குவலயந் தான்உயரும்!
விடிவேற் படும்வள மேற்படும்
வித்தகி! நல்லருளால்!
அடியார் குறைபறந் தோடிடும்!
அம்மா! அருட்புனலே!
தடிமனத் தான்எனைத் தேற்றுவாய்!
தாயே! தயையினளே! 88

தயையெனும் அன்பாலே! தாயே
தினமெனைத் தாங்குகின்றாய்!
கயல்விழி மீனாட்சி! காசி
விசாலாட்சி! காஞ்சிதனில்
இயங்குநற் காமாட்சி! என்றுரை
சக்தி வடிவமெல்லாம்!
பயனுறப் பெற்றுச் சிறந்தே
பெருமைகாண் நன்மையளே! 89

நன்மையே செய்திடும் நாயகி!
உன்னையே நாடிநித்தம்
புன்மை தனைப்போக் கிடவே
பணிந்தேன் தினந்தினமே!
தன்மையே மிக்க தவத்தோருன்
தாளினைச் சுற்றிவந்தால்
இன்னலைத் *தீர்ப்பாய்!*நற் றாயேநீ!
என்றும் இனியவளே! 90

இனிமை தவழ்கின்ற ஏகாந்த
நாயகித் தாயவளே!
தனிமைத் தவமேற்ற கண்ணான
கண்ணே! தனிச்சுடரே!
கனியின் சுவைச்சாறே! கற்கண்டின்
சாறே! வளர்தமிழின்
நனிமிகு பாலாறே! எந்நாளும்
தேனாறே! ஏந்திழையே! 91

ஏந்திழை கொப்புடை நாயகி
என்னம்மை பார்வதியே!
சாந்தம் தவழ்கின்ற சங்கர
னார்தே வியே!மலரே!
மாந்தர் மனத்துள் மகிழ்வினைத்
தேக்கும் மதியொளியே!
காந்தி மதியேகா ரைக்குடி
தன்னையே காப்பவளே! 92

காப்பவள்! என்றுங் கருணை
மழைபொழி கற்பகத்தாள்!
பூப்பவள்! புன்னகை! பார்ப்பவள்!
பாசமாய்ப் பாவிகளும்
கூப்பிட்டால் போதுங் கொடுப்பாள்!
அருளினைக் கொட்டிடுவாள்!
வேப்பிலை யாள்!விளை யாடி
வருகின்ற பொன்னியளே! 93

பொன்னியுங் கங்கையும் புண்ணிய
மாக்கடல் ஆனவளே !
கன்னியாய் மங்கள மங்கையாய்க்
காட்சி தருபவளே !
இன்னிசை கேட்டே இனிய
முகமாய் இருப்பவளே !
பன்னிரு தோளனைப் பெற்ற
நறுமண நாவினளே ! 94

நாவுக் கரசியும் நற்பொருள்
நங்கையும் நாடிநித்தம்
தேவி ! உனைப்புகழ்ந் தேதுதி
பாடுவார் வானுலகத்
தேவரும் போற்றிடும் தெய்வமே !
கொப்புடை நாயகியே !
காவல் புரிந்துநீ ! காரைக்
குடிநகர் ஓங்கினையே ! 95

ஓங்கினைச் சான்றோர் உளக்க
மலத்தே ஒளிச்சுடராய்
தேங்கினை! யாவரும் சேர்ந்தே
தெளிவுபெற் றுய்ந்திடநற்
பாங்கில் அமைந்தாய்நீ! பண்புள்ள
காரைக் குடியினிலே!
ஏங்கிடும் ஏழை எனைக்காத்தே
நாளும் செழிப்பவளே! 96

செழிப்பருள் என்றுமுன் சீர்முகங்
கண்டே பணிபுரிய!
விழிப்பருள் வேதகி! வேலவன்
அன்னையளே! வேல்வடிவே!
பழிப்பெனைச் சேராது பார்ப்பாய்நீ!
அங்காள ஈஸ்வரியே!
எழிலே நிறைந்த இளமதி
கொப்புடை நாயகியே! 97

நாயகி! நற்பணி நாட்டில்
நிகழ்ந்திடச் செய்பவளே!
தூயகி துன்பம் துடைத்திடும்
தூயவன் பெண்ணரசே!
காயமே நோய்தான் அடைந்துமே
வேதனை கண்டிடாமல்
தாயே! உயிரே !என் தெய்வமே!
என்றும்நீ! வாழ்வருளே! 98

வாழ்வருள்! காரைக் குடியுன்
திருக்கோயில் வந்தடைந்தேன்!
தாழ்வினி வாராது காப்பாய்!
தமிழே! கடந்தநாளின்
ஊழ்வினை தீர்ந்தே உவகைப்
புதுவாழ்வும் ஓங்கிடவே!
ஏழ்இசை நாயகி! கொப்புடை
யாள்எனை ஏற்றருளே! 99

ஏற்றருள் இந்நாளே! இப்போதே!
இத்தரு ணத்திலேயே!
மாற்று! விதியை! மகிழ்வாக்கு!
வாழ்வை! மனமுவந்தே!
நாற்றிசை எங்குமுன் நற்புகழ்
நான்தினம் பேசிடவே!
ஆற்றலைத் தந்திடு! நாளுமே!
அன்பே!நான் போற்றுவனே! 100

**நூற்பயன்**

கொப்புடை நாயகி யந்தா
தியைத்தான் குணமுடனே!
ஒப்புடன் கற்போர்! உவப்புடன்
கேட்போர்! உலகினிலே!
தப்பா துயர்வார் திருவே
யடைவார் தளர்வடையார்!
எப்பிறப் பும்நலங் கண்டே
இருப்பார் மகிழ்வுடனே!

—★—

# நூல் ஆசிரியர்

28—6—1940ல் மதுரை மாவட்டம் கீழ்நாச்சிகுளத்தில் ஆனந்தம்பிள்ளை - இலக்குமிஅம்மாள் மகனாகப்பிறந்தவர். ஆரம்பக்கல்வியும் முடிக்க வாய்ப்பில்லாதவர். சிறுவயதி லேயே பெற்றோரைப் பிரிந்து 1956-ல் காரைக்குடி வந்தவர். உணவு விடுதியில் பணியாற்றியபடியே தானாக வும்-பிறகு பெரும் புலவர் பாவலர் மணி ஆ. பழநி அவர் களிடம் சிறிது காலம் தமிழ்கற்று அதன்பயனாக,துரைராஜ் என்னும் பெயரை குறள்பித்தன் எனச்சூட்டிக் கொண்டவர்.

காரைக்குடி வந்தபின் தமிழறிவு பெற்றதுடன் பொது வாழ்வில் நாட்டங்கொண்டு, திராவிட இயக்கத்தில் தன்னை ஈடுபடுத்தி அதனால், தன் விருப்பம் போல், சீர் திருத்த கலப்பு மணமாக திருமதி பழனியம்மாளை வாழ்க்கைத் துணைவியாக ஏற்று ஒரு பெண் மற்றும் மூன்று ஆண் மக்களுக்குத் தந்தையானவர். 1962-ல் ஒரு முறை மனைவியோடும். 1976-ல் மற்றொரு முறை தனியாகவும் அரசியல் காரணமாக சிறை சென்றவர். சிறந்த நகைச் சுவைப் பேச்சாளர் எனப் பாராட்டப்படுபவர்.

காரைக்குடி நகர்மன்ற உறுப்பினராகவும் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத் தலைவராகவும் மற்றும் மாவட்ட, மாநிலக் கூட்டுறவு நிறுவனங்களில் இயக்குந ராகவும் பணியாற்றியவர். நாடகக் கலைப்பற்றின் காரண மாக, அறிவாலயம் — மறப்போம் மன்னிப்போம், மனிதனாய்ப் பிறந்தால்? ஆகிய சமூக நாடகங்களை எழுதி யும் - நடித்தும் உள்ளார். 1977-ல், தமிழக அரசு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்திற்கு "தெய்வத் தமிழகம்" என்னும் தலைப்பில், தமிழக ஆலயங்களின் அற்புதக் கலைப்படைப் புக்களையும்— தமிழக சுற்றுலாத் தலங்களையும்—சுற்றிப் பார்த்து சுமார் 1000 பக்கச் சிறப்புத் தொகுப்பினை அளித்துள்ளவர்.

அதன் பயனாக இயற்றப்பட்டதுதான்—இந்நூல் மேலும் குன்றக்குடி அருள்மிகு சண்முகநாதன் அந்தாதியும் 'பன்மலர்ப்பூங்கா, எனும் கவிதை' நூலையும் அச்சேற்றி வெளியிட எண்ணியுள்ளார்.

